தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு எண்: 249.

# மாலைத் தொகுப்பு

1. திரிபுரை மாலை
2. மனோன்மணி மாலை
3. பழனி மாலை
4. கும்பேச்சுர மாலை



தஞ்சை சரசுவதி மகால் நூலகம்
தஞ்சாவூர்.

1986 ] [ விலை ரூ. 8-00

தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு எண்: 249

# மாலைத் தொகுப்பு

1. திரிபுரை மாலை
2. மனோன்மணி மாலை
3. பழனி மாலை
4. கும்பேச்சுர மாலை

தமிழறிஞர்:
வ. வேணுகோபாலன்
சிறப்புக்கேண்மை பதிப்பாசிரியர்.



தஞ்சை சரசுவதி மகால் நூலகம்
தஞ்சாவூர்.

1986 ] [விலை. ரூ. 8 - 00

# பொருளடக்கம்

# வேண்டுகோள்

கருணையுள்ளங்கொண்ட நம் முன்னோர்கள் அரிய பெரிய இலக்கியங்களையும், பிறவற்றையும், பனையோலைகளில் எழுதி சுவடிகளாக நமக்குத் தந்தனர். அவைகள், பல்வேறு இடங்களில் உள்ளன. சுவடிகள் பழுதடைவதற்கு முன் எம்மிடம் அன்பளிப்பாகக் கொடுத்துதவினால், அவைகள் மக்களுக்குப் பயன்படும்.

எம்மிடம் கொடுப்பதன் மூலம், சுவடி தந்தவர்களும், சுவடி எழுதியோரும் அழியாப் புகழை எமது சரசுவதி மகால் உள்ளளவும் பெறுவர். அவை பதிப்பாகி வருமாயின், சுவடி தந்தார் பெயரும் இடம் பெறுவதோடு, அப்பதிப்பில் 5 பிரதிகளும் பெறுவர்.

எனவே, ''நாம் பெற்ற பேறு பெறுக இவ் வையகம்'' என்ற எண்ணமுடைய நற்பண்பாளர்கள் தம்மிடமுள்ள சுவடிகளை, எமது மகாலுக்குத் தந்துதவ வேண்டுகிறோம்.

இங்ஙனம்,

தஞ்சாவூர்,
20—10—86.

**T. R. இராமசாமி, I. A. S.**
**மாவட்ட ஆட்சியர் & இயக்குநர்,**
**சரசுவதி மகால் நூலகம்.**

# வெளியிடுவோர் முகவுரை

தொன்மை, வாய்ந்த, சுவடிகள் காப்பகமான, சரசுவதி மகால் நூலகத்தை சோழர், நாயக்கர், மராத்தியர் ஆகிய மன்னர்கள் பாதுகாத்தார்கள்.

உலகப் புகழ்கொண்ட இந்நூலகம், தமிழகத்தில், சோழநாட்டில் விளங்கிவருவதுடன், இந்திய ஒருமைப்பாட்டுக்கு வழிகாட்டியாகவும் உள்ளது.

இந்நூலகம் வடமொழி, மராத்தி நூல்களையும் சிறப்பாகத் தமிழ் வளர்ச்சிக்குரிய நூல்கள் பலவற்றையும் வெளியிட்டு வருகின்றது.

இந்நாள், நடுவண் அரசும்-மாநில அரசும் இணைந்து இந்நூலகத்தைச் சிறப்பாக மேம்படுத்தும் நோக்கத்துடன் பதிவு பெற்ற நூலக அமைப்பாக ஆக்கியுள்ளது குறிப்பிடத்தக்கது.

இந்நூலகத்தின் தமிழ் நூல்கள் வெளியீட்டு வரிசையில், 'மாலைத் தொகுப்பு' என்ற நூல் இந்நாள் வெளியிடப் பெறுகிறது. இத்தொகுப்பில் திரிபுரை மாலை, மனோன்மணி மாலை, பழனி மாலை, கும்பேச்சுர மாலை ஆகிய நான்கு நூல்கள் அடங்கியுள்ளன.

இறைவி, முருகன், சிவபெருமான் ஆகிய மூவர் வழிபாட்டிற்கும் உரிய தமிழ்ப்பாடல்கள் இம்மாலைத் தொகுப்பில் அடங்கியுள்ளமை அறியத்தக்கது.

இந்நூலகத்தின் சிறப்புப் பதிப்பாசிரியர் தமிழறிஞர் **திரு. வ. வேணுகோபாலன்** அவர்கள், இம்மாலைத் தொகுப்பை, சிறப்பாக, பதிப்பித்திருக்கிறார்.

அன்னாருக்கு என் நன்றி. இம்மாலைத் தொகுப்பை வெளியிடும் முயற்சியை மேற்கொண்ட இந் நூலக நிருவாகப் பொறுப்பிலுள்ள திரு A. **பஞ்சநாதன்** அவர்களுக்கும், இந்நூலை, செவ்விதமாக அச்சிட்டுக் கொடுத்த **ராம் பிரிண்டர்ஸ்** அச்சகத்தார் அவர்களுக்கும் இத்தகைய தமிழ் நூல்களை வெளியிட நிதியுதவி அளித்து வரும் நடுவண் அரசுக்கும், தமிழக அரசுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இன்னணம்,

தஞ்சாவூர்,
31–10–86.

**து. இரா. இராமசாமி,** இ. ஆ. ப.
தஞ்சை மாவட்ட ஆட்சியர்,
இயக்குனர் தஞ்சை சரசுவதி மகால் நூலகம்,
(பதிவு பெற்றது.)

# பதிப்பாசிரியர் முகவுரை

புகழ் பெற்ற தஞ்சை சரசுவதி மகால் நூலகத்தில் தொன்னூல் சுவடிகள் பல, தேர்வு செய்யப்பெற்று வெளியிடப் பெறுகின்றன.

தமிழ் வளர்ச்சிக்கு உரியனவாகம் பல நூல்கள் வெளிவந்துள்ளன; நம் நாட்டின் பல்கலைச் சிறப்பும் அறிய ஓர் ஆய்வு மையமாக, இந்நூலகம் விளங்கி வருகின்றது; மேலைநாட்டு அறிஞர்களும் இந்நூலகத்தின் கருவூலத்தைப் பயன்படுத்திக் கொண்டு புகழ் பெறுகின்றனர் என்பதை அறிகிறோம்.

இந்நூலகத்தின் வெளியீட்டுப் பணிகளில் தமிழ் நூல்கள் வெளியீட்டுப்பணிபற்றிச் சிறப்பாகக் குறிப்பிடலாம். எந்த ஒரு நூலையும், ஆய்வு முறையில் சிறப்புச் செய்திகளுடன் வெளியிட்டு வரும் பாங்கு, தமிழ் வளர்ச்சிக்கு உரிய சிறந்த பணியாகும்.

நடுவண் அரசும் மாநில அரசும் ஒருங்கிணைந்த குறிக்கோளுடன் இந்நூலக மேம்பாட்டைக் கருத்தில் கொண்டு நிதியுதவியைப் பெருக அளித்துள்ளமை பாராட்டுக்குரியது; இந்நூலகத்துக்குச் சிறப்பான எதிர்காலத்தை உருவாக்கும் முயற்சியில் இந்நாள் இம் மாவட்ட ஆட்சியர் திரு. து. ரா. இராமசாமி (இ. ஆ. ப) அவர்கள் சீரிய பெரும்பணி புரிந்து வருவது பாராட்டுக்குரியதாகும்.

என் ஆசிரியப் பிரான் ஏடுகாத்த மூதறிஞர் மகாமகோபாத்யாய டாக்டர் உ. வே. சாமி நாதையரவர்கள் ''நூலாசிரியர்கள், சுவடி எழுத்தங்கள், சுவடிகள் வாயிலாக இந்நாட்டுக்கு, பயனை எதிர்பாராது பணி புரிந்த

வர்கள். சுவடி பாதுகாத்தல் என்பது தலைசிறந்த தருமம்'' என்று சொல்வார்கள். இதனை முறையே பின்பற்றுகின்றது இந்நூலகம்.

இத்தகைய பெருமைக்குரிய நூலகத்தில், சிறப்புப் பதிப்பாசிரியராகப் பணிபுரியும் எனக்கு மாலைத்தொகுப்பு என்ற தலைப்பில் நான்கு மாலை நூல்களை (திரிபுரை மாலை, மனோன்மணி மாலை, பழனி மாலை, கும்பேச்சுர மாலை) பதிப்பிக்கும்பணியை அளித்தார்கள்.

மாலைத் தொகுப்புச் சுவடிகள் மிகவும் சிதிலமாக இருப்பினும், ஓரளவு அவற்றை விளக்கம் கொண்டு, பாடல்களுக்குக் குறிப்புரை எழுதியிருக்கிறேன்.

மாலை இலக்கியம் என்பது பற்றியும், நான்கு படைப்புக்கள் பற்றியும் ஆய்வு முறையில் செய்திகளை யும் எழுதியிருக்கிறேன்.

இத் தொகுப்பு நூலை, பதிப்பிக்கும் பணியை எனக்கு அளித்த இந்நூலக இயக்குனரும் இம்மாவட்ட ஆட்சித் தலைவருமான உயர்திரு T. R. இராமசாமி I.A.S. அவர்கட்கு என் மனமார்ந்த நன்றியைக் கூறிக் கொள்கிறேன். இத்தொகுப்பு வெளிவருவதில் எனக்கு ஊக்கம் அளித்த இந்நூலக நிருவாகப் பொறுப்பு அலுவலர் உயர்திரு N. பஞ்சநாதன் M.A. B. Li B.Sc. அவர்கட்கும் என் நன்றி உரியதாகும். இந்நூலைச் சிறப்பாக அச்சிட்டு அளித்த தஞ்சை **ராம் பிரிண்டர்ஸ்** அச்சகத்தாருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

27—10—86
தஞ்சாவூர்.

அன்புடன்,
**வ. வேணுகோபாலன்**
சிறப்புப் பதிப்பாசிரியர்.

# ஆய்வு முன்னுரை

## மாலைத் தொகுப்பு

திரிபுரை மாலை, மனோன்மணி மாலை, பழனி மாலை, கும்பேச்சுரர் மாலை ஆகிய நான்கு நூல்கள் இம்மாலைத் தொகுப்பில் அடங்கியுள்ளன. சரஸ்வதி மகால் நூலகம் தமிழ்ச்சுவடிப்பிரிவில் சுவடி இலக்கம் 1040, திரிபுரை மாலைக்கும், 1041, மனோன்மணி மாலைக்கும், 336, பழனி மாலைக்கும் 335, கும்பேச்சுரர் மாலைக்கும் உரியவையாகும்.

## மாலை பற்றிய விளக்கம்

தமிழ் மொழில் பிரபந்தம் என்ற மரபில் தொண்ணூற்றாறுவகைப் படைப்புக்கள் உண்டு என்று கூறப் பெறும். அவற்றில் ஒன்றே மாலை என்பது. பிரபந்தங்கள் தொண்ணூற்றாறுக்கும் இலக்கியங்கள் கிடைக்கவில்லை.

பிரபந்தங்கள் என்ற வரிசையில், உலா, தூது, பரணி, கலம்பகம், அந்தாதி, பிள்ளைத்தமிழ், ஆற்றுப் படை, மடல், குறம், குறவஞ்சி, கோவை, ஊசல், அம்மானை, பள்ளு, மாலை என்பனவற்றைச் சிறப்பாகக் கூறலாம்.

பிரபந்தங்களின் இலக்கணத்தைத் தமிழ் மொழியில் பழமையான யாப்பியல் நூலான பன்னிருபாட்டியலில் காணலாம். அதனைப் பின்பற்றி வச்சணந்தி மாலை என்னும் வெண்பாப் பாட்டியல் நூலும், நவநீதப்பாட்டியல், இலக்கண விளக்கம் ஆகிய நூல்களும் பிரபந்த இலக்கணத்தைக் கூறுகின்றன.

பன்னிரு பாட்டியல், கி. பி. 10ம் நூற்றாண்டுக்கு முன்னரே இயற்றப் பெற்ற நூல் என்றும் அதனை அடுத்துத் தோன்றியவையே வச்சணந்தி மாலை, நவ

நீதப் பாட்டியல் முதலியன என்றும் ஆய்வாளர் கூறுவர் [க. ப. அறவணன். M.A., B.O.L.M.Litt., இந்திர காளியம் பக் ii 3]

யாப்பிலக்கண அமைதிகொண்டு பிரபந்தங்கள் அமைதிபெற்று, மாலை நூல்கள் பல தோன்றின. எடுத்துக்காட்டாக, சகலகலாவல்லி மாலை. மகரநெடுங் குழைக்காதர் பாமாலை, திருவேங்கடமாலை, சோண சைல மாலை, பரத்தையர் மாலை, பராபரை மாலை, அம்பிகை மாலை, அணியாபரண மாலை, வராகி மாலை திருக்கழுக்குன்ற மாலை, சோபன மாலை என்பன வற்றைக் குறிப்பிடலாம். இவையன்றி வருக்க மாலை, பன்மணி மாலை முதலியனவும் உள்ளன.

மாலை நூல்கள் 100 பாக்கள், 50 பாக்கள், 30 பாக்கள், 20 பாக்கள் 10 பாக்கள் என்றவகையில் பாடப் பெற்றுள்ளன என்பதும் அறியலாம். பாக்கள் மிக்கும் குறைந்தும் பாடும் அமைதியை, மாலை நூல்களைக் கொண்டு அறியலாம்.

ஆசிரிய விருத்தம், கலித்துறை, வெண்பா ஆகிய யாப்பமைதியில் மாலை நூல்கள் பாடப் பெற்றுள்ளன என்பதும் அறியலாம்.

பன்னிரு பாட்டியல் நூலில், மாலை என்ற தலைப் பில், மும்மணி மாலை, நான்மணி மாலை, கலம்பக மாலை, வருக்க மாலை, நாம மாலை, புகழ்ச்சி மாலை, நவமணி மாலை, கைக்கிளை மாலை, தாரகை மாலை, செந்தமிழ் மாலை ஆகியவற்றிற்கு இலக்கணம் கூறப் பெற்றுள்ளன. பல்சந்த மாலை, இரட்டை மணி மாலை. பன்மணி மாலை, அங்க மாலை, தானை மாலை, வஞ்சி மாலை, வாகை மாலை என்பவை மேலும் சேர்த்து அவற்றிற்கு இலக்கணம் கூறுகின்றன வச்சணந்தி மாலை நூல்.

இவையன்றி, மணிமாலை, மெய்க்கீர்த்தி மாலை, காப்பு மாலை, உற்பவ மாலை, தண்டக மாலை என்பனவும் மாலை வகையைச் சேர்ந்தவையாகும்.

மேற்கண்ட மாலைவகை அனைத்தும், வெண்பா, கலித்துறை. விருத்தம் போன்ற யாப்பமைதியால் தனித்தும் கலந்தும் பாடப் பெற்றுள்ளன.

ஆசிய விருத்நத்தால் பாடப் பெறுவது காப்பு மாலை.

ஒவ்வொரு சந்தத்துக்கும் பத்துப் பத்து வண்ணச் செய்யுள்களால் ஆசிரிய விருத்தத்தால் பாடப் பெறுவது பல் சந்த மாலை.

வெண்பா, அகவல், கலித்துறை மூன்றாலும் முப்பது செய்யுள் வரப் பாடுவது மும்மணி மாலை. ஆசிரிய விருத்தம் சேர்த்து, நான்குவகையாக நாற்பது பாடல்கள் பாடப் பெறுவது நான்மணி மாலை.

வெண்பாவும் கலித்துறையும் கலந்து இருபது பாக்களால் பாடப் பெறுவது இரட்டைமணி மாலை

வெண்பாவும் அகவலும் கலந்து நூறு பாடல்களால் பாடப் பெறுவது இணைமணி மாலை.

வெண்பாவும் விருத்தமுமாக வருவதும் இரட்டை மணி மாலை.

கலம்பக உறுப்புக்களில் அம்மானை, ஒருபோகு, ஊசல் நீங்கலாக, மற்ற உறுப்புக்களில் பாடப் பெறுவது பன் மணி மாலை.

'தேவர்கள் காக்க' வென்று ஒன்பது ஆசிரிய விருத்தங்களால் பாடப் பெறுவது நவமணி மாலை.

பத்து விருத்தப் பாக்களால் 'காக்க' என்று பாடப் பெறுவது உற்பவ மாலை.

ஆண் பெண்களின் உடல் உறுப்புக்களை வெண்பா வாலும் வெளி விருத்தத்தாலும் பாடுவது அங்க மாலை.

தானையை ஆசிரியப்பாவால் பாடுவது தானை மாலை.

போருக்குப் படையெடுத்துச் செல்லும்போது ஆசிரியப் பாவால் பாடுவது வஞ்சி மாலை.

போர்க்கள வெற்றி குறித்து பாடுவது வாகை மாலை.

போர்க்களத்தில் முன்செல்லும் படையைப் புகழ்ந்து, ஒன்பதுபாக்களால் சந்த அமைதியுடன் பாடுவது தாரகை மாலை.

மகளிர், பெயர், குணம் பற்றி, வஞ்சிப்பாவால் அடுக்கிப் பாடுவது புகழ்ச்சி மாலை. மேற்கூறியவாறு ஆண்மகனைப் பாடுவது நாம மாலை.

வெண்பா பத்தும் விருத்தம் பத்தும் வரப் பாடுவதும் இரட்டைமணி மாலை. மொழிக்கு முதலாக நின்ற பன்னிரண்டு உயிரெழுத்துக்களாலும் ஒவ்வொன்றுக்கும் ஒருபாடலாக எழுத்தை முதலாகக் கொண்டு பாடுவது வருக்க மாலை.

மருட்பாவாலும், ஆசிரியம், வஞ்சி நீங்கலாக உள்ள மற்றப் பாக்களாலும் பாடப் பெறுவது கைக்கிளை மாலையாகும்.

நான்கு பாக்களாலும் பாவினத்தாலும் பாடப் பெறுவது செந்தமிழ் மாலை.

இவ்வாறாக மாலை நூல்கள் பாடப்பெற வேண்டும் என்பது பாட்டியல் நூல்களில் கூறப் பெற்றுள்ளது. இவற்றால் தமிழ் மொழியில் மாலைப் பிரபந்த வளர்ச்சியை நன்கு அறிய முடிகின்றது.

## இம்மாலைத் தொகுப்பு

இவ்வாறாக வளர்ந்தமாலைப் பிரபந்த மரபில், தோன்றியவையே திரிபுரை மாலை, மனோன்மணி மாலை, பழனி மாலை, கும்பேச்சுரர் மாலை ஆகிய நான்கும் எனலாம்.

## திரிபுரை மாலை

முதலில் திரிபுரை மாலை, மனோன்மணி மாலை என்ற இரு மாலைகளையும் பற்றி இங்கே விளக்கம் தரு கின்றேன். திரிபுரை மாலை 33 பாக்களும் மனோன்மணி மாலை 31 பாக்களும் கொண்டவை.

இவ்விரண்டு மாலை நூல்களும் இறைவியான திரிபுரை மனோன்மணியின் அருள் பெறுவதற்கு உரியன வாகப் பாடப் பெற்றவை.

ஒவ்வொரு பாடலும், ஒவ்வொரு குறிப்பிட்ட செயலுக்காகவும் இறைவியை வேண்டிப் பாடப் பெற வேண்டுதற்கு உரியனவாக அமைந்துள்ளன. சுவடியில் ஒவ்வொரு பாடலுக்கும் உரிய மந்திர எழுத்துக்கள் கொண்ட சக்கரங்கள் வரையப் பெற்றுள்ளன. இச் சக்கரங்களின் நுட்பம் வரைவோரால் மாறுபட்டிருந்தால் மிகவும் கேட்டைத் தரும் என்பதால் அச்சக்கரங்களை இந்நூலுடன் வெளியிடவில்லை. ஒவ்வொரு பாடலுக்கும் பாடலின் கீழ், குறிப்புரை தந்திருப்பதில் 'இப்பாடல்

இதற்குரியதாகப் பாடப்பெறுவது' என்று சுட்டிக் காட்டியிருக்கிறேன். எனவே ஒவ்வொரு பாடலும் ஒவ்வொரு பயன் கருதிப் பாடப் பெறுவதற்கு உரியனவே.

ஓரளவு, பாடல்களுக்குக் குறிப்புரை எழுதியிருக்கிறேன். பாடல்களில் வரும் அம்பிகையின்—திரிபுரையின் நாமங்கள் ஏட்டில் உள்ளபடியே வெளியிடப் பெற்றுள்ளன.

திரிபுரை மாலை, மனோன்மணி மாலை இரண்டும், 'மந்திர மாலை' நூல்கள் எனக் கருத வேண்டும்; மந்திரச் சொற்களைக்கொண்டு பாடப் பெற்றவை ஆதலின் மந்திர மாலை எனலாம்.

சைவத்திருமுறைகளில் திருஞான சம்பந்தர், அப்பர் சுந்தரர் ஆகியோர் பாடல்களில் மந்திரப் பாடல்களும் உண்டு. எடுத்துக்காட்டாக, நமச்சிவாயப்பதிகம்,கோளறு பதிகம் என்பவற்றைக் குறிப்பிடலாம். எனவே, திரிபுரை மாலை, மனோன்மணி மாலை இரண்டையும் உள்ளத் தூய்மை கொண்டு நம்பிக்கையுடன் பாடினால் அன்னையின் அருள்பெறலாம். ஒவ்வொரு பாடலுக்கும் உரிய பயன்பற்றியும், குறிப்புரையில் ஆங்காங்கே விளக்கியிருக்கிறேன்.

குறிப்பிட்ட ஒரு பாடலை, குறிப்பிட்ட ஒரு காரியத்துக்காக 'உரு'வாக மனனம் செய்து அன்னையை வழிபடவேண்டும். 'உரு' மனனம் செய்வது ஒரு பாடலை நூறு முறை பாடுவதும் அல்லது ஐம்பத்தொரு முறை பாடுவதும் உண்டு எனச் சான்றோர் கூறுகின்றனர்.

## திரிபுரை மனோன்மணி மாலை

பராசக்தியான திரிபுரையை வழிபடுவதால் எல்லாப் பயன்களையும் பெறலாம், வீடுபேற்றையும் அடையலாம்.

திரிபுரை, திரிபுர சுந்தரி என்றும் அழைக்கப் பெறு வாள். வடமொழியிலும் திரிபுரையைப் பற்றிச் சிறப்பான நூல்கள் உள்ளன. சாஸ்திர நூல்களில் தேவி வழிபாட்டு முறை பற்றிப் பல நூல்கள் வடமொழியில் உள்ளன.

யோக சாஸ்திர முறைப்படி உடற்கூறுகளில் ஆறு ஆதாரங்கள் கூறப்பெறும். அவற்றில் மூலாதாரம் என்பது அடிப்படைநிலை. இம் மூலாதாரத்தில் 'திரி கோணம்' உள்ளது. அதன் நடுவண் 'பிந்துஸ்தானம்' உள்ள தென்றும் அதனில் வீற்றிருப்பவளே திரிபுரை என்றும் கூறப்பெறும்.

திருமூலர் இயற்றிய திருமந்திர நூலிலும் வட மொழியில் சௌந்தர்ய லகரி முதலிய சக்தி வழிபாட்டு நூல்களிலும், திரிபுரை பற்றி விரிவாகச்செய்திகளைக் காணலாம்.

திரிபுரையின் வழிபாடு மிகவும் சிறப்பானதொன்று என்று சான்றோர் கூறுவர்.

ஆறு ஆதாரங்கள் உள்ள வடிவத்தில் அக்னி, சூரியன், சந்திரன் மூன்றும் உள்ளனவென்றும் அவற்றையே பிரம்ம கிரந்தி, விஷ்ணு கிரந்தி, ருத்திர கிரந்தி என்றும் கூறுவதாகவும் அதுவே திரிபுரை எனப் படும் என்றும் கூறுவர்.

திரிகோணத்தில் வீற்றிருப்பவள் திரிபுரை. காமேச் வரீ, வஜ்ரேச்வரீ, பகமாலினீ ஆகிய மூன்று சக்திகள் முக்கோணத்தில் அமர்ந்திருக்கின்றனர். நடுவே பிந்து ஸ்தானத்தில் திரிபுரை அமர்ந்திருக்கிறாள். இச்சாசக்தி, கிரியாசக்தி, ஞானசக்தி ஆகிய மூன்று சக்திகளே திரி கோணத்தில் இருப்பவர்கள். இந்த நுட்பத்தை (சௌந் தர்யலகரி(வடமாழி) 11ம் சுலோகத்தால் அறியலாம்.

## மந்திர நூல்கள்

வடமொழியில் சௌந்தர்யலகரி போன்ற நூல்கள் மந்திர மொழிகளாக உள்ளன என்பது அறியலாம். அவ்வாறே, இத்திரிபுரை மாலை, மனோன்மணி மாலை இரண்டும் மந்திரமொழி நூல்கள் என்பதில் ஐயமில்லை.

ஒவ்வொரு மொழியிலும் மந்திரங்கள் உண்டு. தமிழ், வடமொழி இரண்டையும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது மந்திரப் பாடல்கள் வடமொழியில் உள்ளவை போன்றே தமிழ் மொழியிலும் உள்ளன.

மந்திரம் என்ற சொல் இருமொழிகளுக்கும் பொது வானது எனலாம். திருமூலர் தமிழில் இயற்றிய நூலுக்குத் திருமந்திரம் என்ற பெயர் உள்ளது.

தமிழ் மொழிக்கு இப்போது கிடைத்துள்ள நூல் களில் பழமையானது, முதன்மையானது தொல்காப் பியம். அந்நூலில் மந்திரம் என்பது பற்றி விளக்கி யுள்ளார்.

> 'நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
> மறைமொழி தானே மந்திரம் என்ப''
> (தொ. பொ)
> ''மந்திரப் பொருள்வயின்'' (தொல். 932)
> ''மறைமொழி கிளந்த மந்திரத்தான'' (தொ. 1414)

என்ற நூற்பாக்கள், மந்திரம் என்பது பற்றிக் குறிப் பிடுகின்றன.

மற்றும், ''பாட்டுரை நூலே வாய்மொழி பிசியே, அங்கதம் முதுசொல்'' (தொ. பொ. 384) என்ற நூற்பா வுக்குப் பொருள் கூறும்போது அங்கதம் என்பதும் மந்திரத்தைச் சார்ந்ததே என்பர் பேராசிரியர். ''இவை

தமிழ் மந்திரம் என்றற்குப் பாட்டாகி அங்கதம் எனப் படுவனவும் உள. அவை நீக்குதற்கும் என உணர்க'' என்ற பேராசிரியர் உரையால், மந்திரச் சொற்கள், மந்திரப் பாடல்கள் இரண்டும் பழமையில் இருந்தமை தெளிவு. அங்கதம் என்பதும், மந்திரப்பாட்டே என்பது சான்றோர் கூற்று.

இதனை வழிமொழிந்து திருவள்ளுவரும்

''நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்'' என்றார்.

நிறைமொழி மாந்தரால் கூறப்பெற்ற மறைமொழி எதுவோ, அது மந்திரம் என்றார்.

மாந்தர் என்பதற்கு மனிதர் என்றே பொருள். மாந்தர் கூறிய மறைமொழியே மந்திரம் எனப்பட்டது. அம்மாந்தர் உலகத்துப் பொய்யடிமையில்லாது வாழ்ந்த **நிறைமொழி** மாந்தராவார். நிறைமொழி மாந்தர் கூறிய மறைமொழியே மந்திரம் என்று கூறப்பெற்றது.

அம்மாந்தர் பற்றற்றான் பற்றினைப் பற்றியவர், துறந்தவர் அறவாழி அந்தணர், சான்றோர் என அறிய வேண்டும்.

## தமிழ் மந்திரங்கள்

பொய்யில் கேள்விப் புலமையுடையோரான நக்கீரர் கடைச் சங்கப் புலவரில் ஒருவர். பொய்யுரையை மறுத்து மெய்யுரை கூறும் பெற்றிமை உடையவர். திரிபுரம் எரித்த விரிசடைக்கடவுளையே வாதில் வென்றவர்.

இப்புலவர் சங்கத்து வீற்றிருந்தார். அப்போது 'கொண்டான்' என்னும் வடமொழிப்புலவன் ''வடமொழி யே சிறந்தது தமிழுக்கு அச்சிறப்பில்லை''என்று கூறினன். நக்கீரர் அம்மொழி கேட்டுச் சினம் கொண்டார். ''தமிழ்

மொழியின் ஆற்றலைக் காட்டுவேன்'' என்று கூறி ஒரு பாடல் பாடினார்:

''முரணில் பொதியில் முதற்புத்தேள்வாழி
பரண கபிலரும் வாழி - அரணிலா
ஆனந்த வேட்கையான் வேட்கோக்
குயக்கொண்டான்
ஆனந்தம் சேர்க சுவாகா.''

இப்பாடலைக் கேட்ட அளவிலே கொண்டான் வெட்டுண்ட மரம்போல் உயிர்பிரிந்து கீழ் வீழ்ந்தான். அது கண்ட பாண்டியனும் புலவர்களும் நக்கீரரை வேண்டிக் கொண்டனர்; கொண்டானை உயிர்ப்பிக்குமாறு வேண்டினர். நக்கீரர், சினம் ஆறினார்.

மீண்டும் ஒரு பாடல் பாடினார்

''ஆரியம் நன்று தமிழ்தீ தெனவுரைத்த
காரியத்தாற் காலக்கோட் பட்டானைச் - சீரிய
அந்தண் பொதியில் அகத்தியனார் ஆணையால்
செந்தமிழே தீர்க சுவாகா.''

இப்பாடல் பாடிய அளவில் கொண்டான் உயிர் மீண்டு எழுந்தான். நக்கீரரை வணங்கினான் 'குற்றம் பொறுக்க' வேண்டினான். தொல்காப்பிய உரையாசிரியர்களான பேராசிரியர், நச்சினார்க்கினியர் ஆகியோர், ''இவை தெற்கில் வாயில் திறவாத பட்டிமண்டபத்தார் பொருட்டு நக்கீரர் ஒருவன் வாழவும், சாவவும் பாடி இன்னவாறாகெனச் சபித்தற் பொருட்டாக வந்த மந்திரம் பாட்டாய் வருதலின் அங்கதமாயின'' என்றனர்.

இவ்வகையில் நிறைமொழி மாந்தரான சங்கப் புலவர்களை 'பொய்யடிமையில்லாத புலவர்தம் அடி

யார்க்கும் அடியேன்' என்று சுந்தரமூர்த்தி சுவாமிகளும் போற்றினர்.

சைவ நாயன்மார்களின் பாடல்களில் ஞானசம் பந்தர், அப்பர், சுந்தரர் ஆகியோரின் பாடல்களால் விளைந்த அற்புதங்கள் பல.

நமச்சிவாயப் பதிகம், கோளறு பதிகம் முதலியன மிகச்சிறப்புற்ற மந்திரப் பாக்கள்.

சைனர்களுடன் அனல் வாதம், புனல் வாதம் முதலியனவற்றால் வெற்றிகொண்ட ஞானசம்பந்தரின் தமிழ்மொழி நிறைமொழியன்றோ? மிகப்பிற்காலத்தில் அபிராமி பட்டர் பாடிய அபிராமி அந்தாதியும், குமர குருபரரின் சகலகலாவல்லி மாலையும் பல அற்புதங் களைக் காட்டியவை என்பது அறிஞர் அறிவர்.

எனவே, திரிபுரை மாலை, திரிபுரை மனோன்மணி மாலை இரண்டும் மந்திர மாலை நூல்கள் எனல் பொருந்தும்.

## திரிபுரை மாலைச் சிறப்பு

திரிபுரை மாலைச் சிறப்புப் பற்றி அறிவதற்கு, இம்மாலையில் வரும் திரிபுரையின் திருநாமங்களே எடுத்துக்காட்டுகளாகும். அவை வருமாறு:

மாதரி, வீரி, வயிரவி, காளி, வாலை, குணபூதரி, யோக பூரணத்தி, அந்தரி, மந்திரசடாட்சரி, வயிடூரியத்தி மரகதத்தி, பஞ்சாட்சரத்தி, அம்பரத்தி, ஆனந்தி, முக் கண்ணி, வராகி, பராபரி, பயங்கரத்தி, அஞ்சுமுகத்தி, ஆதிபராசக்தி, சத்துரு சங்காரி, சடாட்சரி, சாம்பவி, சற் குணத்தி, உத்தரி, கங்காளி, உமை, திரிசூலி, உத்தமத்தி கோமளை, சங்கரி, லோகதயாபரி, வேணி, ஏகசக்தி

வேதவேதாந்தி, விமலி, ஆங்காரி, காரி, அகோரி. வசிகரி அகம்படிச்சி, ரீங்காரி, நிர்க்குணத்தி, ஓங்காரி, உத்தமி, சிவசக்தி, தற்பரி, லோகாம்பரி, சர்வேசுவரி, சிற்பரி, ஞானசிவானந்தி, மோகினி, சின்மயத்தி, அமிர்த சிரோ மணி, சதா நித்திய யோக தயாபரி, சிவஞான போதகி, கபாலி, திகம்பரி, நவநீதகாரணி, விநோதரி, ஆரணி, கங்காளி, ரூபி, பிடாரி, சாமுண்டி, யோகினி, யாமளை, வச்சிரவல்லி, மாதங்கி, பத்திரமாகாளி, மணிமந்திரவே தங்கி, சாயுச்சியரூபி, சூரி, வீரி, வனதுர்க்கை, மாலி, புவனை, மகேசுவரி, குடோரி, காந்தாரி, நிர்மலநிர்க் குணத்தி, ஈசுவரி, சங்காரி, நிட்களரூபி, நிராமயத்தி, நிஷ்டூரி, வித்தகத்தி, அமலி, புரந்தரி, கமலி, சூலாயுதத்தி சோமகத்தி, காலாயுதத்தி, கண்ணாயிரத்தி, கருணா கரத்தி, விடம்பனத்தி, சிவசக்தி, பகீரதி, யோகினி, விகிருதி, மாமந்திர ரூபி, கனகசக்தி. காமாட்சி, தயாபரி: பார்வதி, அகோரபடத்தி, புன்னைவனக்குயில், ஆயி, மாயேசுவரி என்பன.

இத்திருநாமங்கள் யாவும் திரிபுரை மாலையில் கூறப் பெற்றுள்ள மந்திர மொழிகளாகும். நிறைமொழி மாந் தரான ஆசிரியர். திரிபுரையை வழிபட்டுப் போற்றிப் பகர்ந்த மந்திர மொழிகளை, தேவியின் அருள்வழிபாட் டிற்குரியவர்கள் முறையுடன் பாடி அருள்பெறலாம்.

## திரிபுரை மனோன்மணி மாலை

அடுத்து, திரிபுரை மனோன்மணி மாலையில் வரும் திருநாமங்களையும் அறியலாம்:

அவை வருமாறு: பாலை, வாலை, கௌரி, மகமாயி, திரிபுரை, மனோன்மணி, அந்தே, புவனை, வல்லி, வேதாந்தசக்தி, மயேசுவரி, மாதங்கி, சிவகாமி, கங்கைச் சடைச்சி, அகிலாண்டநாயகி, மதுமாங்கிசத்தி, பராபரை, ஆனந்தவல்லி என்பனவாகும்.

## நூலாசிரியர்

திரிபுரைமாலை, திரிபுரை மனோன்மணிமாலை ஆகிய இரு மாலை நூல்களுக்கும் ஆசிரியர் ஒருவரே எனத் துணிய முடிகின்றது; இவ்விருமாலைகளையும் (தனித் தனியே) வேறுவேறாகப் பாடியிருப்பதற்குரிய காரணம் என்ன வென்று அறியமுடியவில்லை. இருவேறு அமயங்களில் இவ்விருமாலைகளும் பாடப் பெற்றிருக்கலாம் எனக் கருதவேண்டியுள்ளது.

இவ்விருமாலைகளையும் பாடிய ஆசிரியர் 'இராசன்' எனவும் கவிராசன் எனவும் அழைக்கப் பெற்றவராவார்.

கி.பி. 16ம் நூற்றாண்டில் விளங்கிய, கவிஞர் இவர். பாண்டிய நாட்டில், மதுரையை அடுத்த வீரசோழன் என்ற பெயரைக் கொண்டதும், வீரை என்று அழைக்கப் பெறுவதுமான ஊரில், அந்தணர் குலத்தில் தோன்றியவர்; மதுரையை அடுத்த வேம்பத்தூர் என்ற ஊரில், பிற்காலத்தில், தமிழ்ச்சங்கம் ஒன்று இருந்தது. அத் தமிழ்ச்சங்கத்தில், இக்கவிராசர் ஒரு புலவராக விளங்கியவர். வேம்பத்தூர் தமிழ்ச் சங்கத்தில் 15, 16ம் நூற்றாண்டுகளில் புலவர் பலர், விளங்கினர் என்பதும், பல தமிழ்ப்படைப்புக்களை இயற்றியுள்ளனர் என்பதும், இலக்கிய வரலாற்றால் தெரியும் உண்மைகளாகும்.

எனவே, இந்நூலாசிரியரைப்பற்றி, இவ்விருமாலைகளில் உள்ள அகச்சான்றுகளாலும், பிறவரலாற்றுச் செய்திகளாலும் நாம் அறிய வேண்டியவற்றை இனி அறியலாம்.

## சிறப்பான செய்திகள்

திரிபுரை மாலையின் முதல் பாட்டு விநாயகர் காப்பாக அமைந்துள்ளது. காப்புச் செய்யுளில், "திரிபுரை

மாலை தன்னைத் துணிந்துரைக்கவே சித்தி தரும், பரகதி உண்டாம்; செல்வம் உண்டாம், புத்தி தரும், புகழ் பெருகும், அருள்தரும், முத்திதரும் வித்தைதரும்'' என்று முன்மொழிந்து பாடியிருக்கின்றார்.

ஆசிரியர், திரிபுரையை வழிபட்டு அருள் பெற்ற சிறப்பை, தெளிவாக எடுத்துரைக்கின்றார். அவை வருமாறு:

''என்றும் என் நெஞ்சகத்தில் ஆதரவாக நின்று உதவும் திரிபுரை'' (பா 2)

''எம் கலி தீர்க்க வருவாள்'' (பா 4)

''என்றன் மனதில் வைக்க, அவ்வேளை வந்து முன் நிற்பாள்'' (பா 5)

''எந்தன் கண்ணால் காண என்முன் நிற்பாள்'' (பா 8)

''சருவ உயிர்க்கும் எங்கும் ஒருநிரையாய் இருந்தருள் ஏகசக்தி'' (பா 10)

''ஏகாந்த மாக வருவாள் திரிபுரை'' (பா 22)

''குத்தங்கள் கோடி செய்தாலும் உன் கடாட்
சம் கொடுத் தருள்வாய்'' (பா 32)

திரிபுரையை வழிபடும் அன்பருக்கு எவ்வினையும் எத் துயரும் எப்பகையும் கெடுத்து அருள் புரிவாள் அன்னை என்று கூறுகிறார்.

''அன்பர்க்கு இடர்வினை தான் நினைக்கும்
வஞ்சகர் நெஞ்சைப் பிளப்பாள்'' (பா 16)

''உன்னைத் துதிக்கும் அடியார் தமக்கு உலகு தன்னில் பின்னை யிடர்வினை யேயுமுண்டோ?

பிரதட்சிணமாய் அன்னையைப் போல்வந்து
அடியேனைக் காத்தருள்வாய் புன்னைவனக்
குயிலே'' (பா. 30)

திரிபுரை மனோன்மணி மாலையில் ஆசிரியர் கூறும் வழிபாட்டுச் சிறப்பு வருமாறு:

''மனத்தில் நினைக்க வரும் மாதே புவனை திரி புரை வாலை மனோன்மணியே'' (பா 42) என்ற வரிகளில், வாலை, திரிபுரை, புவனை மூவர் வழி பாட்டு உயர்வைச் சுட்டிக் காட்டுகின்றார்.

''வாலை புவனை திரிபுரை மூன்றும் இவ்வைய கத்தில், காலையும் மாலையுஉச்சியுமாக எக்காலத்துமே ஆலயமெய்தி வராகிதன்பாதத்தை அன்பிலுன்னி மால யன் தேவர் முதலான பேர்களும் வழுத்துவரே'' என்று வராகி மாலையில், கவிராசர் பாடியிருப்பதும் அறியலாம்.

''மொழி கொடுப்பாள்'' என்று திரிபுரை வாக்கினால் அருள் புரிவாள் என்றும் உறுதியுடன் கூறுகிறார்.

மாலை இறுதிப் பாட்டில் (64) மந்திரமாலையாக, வேண்டிக் கொண்டு ''என் வாக்கு சரசுவதியாகத் தியானித்துக் கொண்டேன்'' என்றும் அனைவருக்கும் நல்வாழ்வு கிட்டவேண்டும் என்றும் நிறை மொழியால் ஆணையிடுகின்றார் என்பது இம்மந்திரமாலையின் தனிச் சிறப்பாகும்.

## ஆசிரியரின் தமிழ்ப்பற்று

''என் மதுரத் தமிழுக்கு முன்வந்து நிற்பாள்'' (பா 11) என்று தாம்பாடிய மாலைத் தமிழின் இனிமை, தெய்வத்தன்மையைக் கூறுகின்றார். ''நிறைந்த தமிழ்

பாங்காய்க் கொடுத்து'' (பா 38)என்று கூறி, திரிபுரையே தமக்குத் தமிழ்மொழியை நிறைவுடனும் பாங்குடனும் தந்தாள் என்பர்.

''தண்தமிழ்த் தாள் வளையத்திலாடும்'' (43) என்று கூறி, திரிபுரையைச் சிறப்பிக்கின்றார். மற்றும்,25ம் பாடலில் திரிபுரை மாலையில், ''சங்கத்தில் செந்தமிழ் பாடுதற்குச் சாந்நித்தியமாய் என் அங்கத்தில் நின்று ......... அருள் புரிவாய்'' என்று கூறுகின்றார். திரிபுரை மாலை தமிழ்ச் சங்கத்தில் அரங்கேறியதாக உள்ள குறிப்பாகவே கொள்ள வேண்டியுள்ளது. அன்றியும் வேம்பத்தூர் தமிழ்ச் சங்கம் சிறப்பாக விளங்கிய காலத்தில் 15, 16ம் நூற்றாண்டில் அச்சங்கப் புலவராக விளங்கியவர் இம்மாலை ஆசிரியர் கவிராசர் என்பது அறியலாம். இதன் விரிவை அடுத்து வரலாற்றில் காணலாம்.

இவ்வாசிரியர் வேம்பத்தூர் தமிழ்ச்சங்கப்புலவர் என்பதை இப்பாடல் வழியே அறிய முடிகின்றது.

இவ்வாசிரியர் பெயர் கவிராசன் என்பது சௌந்தர்யலகரியில் தெளிவாகக் கூறியுள்ளார்.

திரிபுரை மனோன் மாலையில், கூறுவதையும் அறியலாம்.

திரிபுரை மனோன்மணி மாலை காப்புப் பாடலில் ''வெற்றிவேல் பரவு ராசன் விரும்பிய போதகம்தான்'' என்றும், 45ம் பாடலில் ''பயேசுவரி மாதங்கி இராசன் முன் வருவாலை மனோன்மணியே'' என்றும் கூறுகின்றார்.

இங்கே இராசன் என்று கூறிக்கொள்ளும் கவிஞரே வீரைக் கவிராசர் என்பதற்கு, ஓரளவு சான்றுதருவது, திரிபுரை மாலையில் 25ம் பாடல் தமிழ்ச்சங்கம் பற்றிக் குறிப்பதாகும்.

மதுரையை அடுத்த வேம்பத்தூரில்தான் தமிழ்ச் சங்கம் இருந்த தென்றும் அதனை அடுத்த ஊர் வீரை என்ற வீரசோழன் என்றும், தமிழ்க்கவிஞர் பலர் அங்கே அவ்வூரில் வாழ்ந்தனர் என்றும், வீரைக் கவி ராசர் வேம்பத்தூர் தமிழ்ச்சங்கப் புலவர் என்றும் திரு S. சோமசுந்தர தேசிகர் 16ம் நூற்றாண்டுப் புலவர் வரலாற்றில் கூறியிருக்கிறார்.

மற்றும் ஒரு குறிப்பு வலியுறுத்தும் செய்தியாதெனின் ''காமாட்சி என்று தினம் நினைத்தால் லகிரி என அருள் தருவாள் திரிபுரை'' என்று திரிபுரை மாலை 26ம் பாடலில் கூறியுள்ளார். லகரி லகிரி என்பதற்கு அலை, பெருக்கு என்று பொருள். அன்னையின் கருணைப் பெருக்கைக் குறிப்பிட்டதாகும்.

ஆதிசங்கரர் வடமொழியில் இயற்றிய சௌந்தர்ய லகரி ஆனந்தலகரி-என்ற இருநூல்களையும் கவிராசர் தமிழ்ப்பாக்களில் மொழி பெயர்த்துள்ளார். எனவேதான் திரிபுரை மாலையில் ''லகிரி என அருள்தருவாய் திரி புரை'' என்று குறுப்பிட்டார். வீரைக் கவிராசர் சௌந் தர்யலகரி, ஆனந்தலகரி பாடியதற்குப் பின்னரே, இத் திரிபுரை மாலை-மனோன்மணிமாலை பாடியிருக்கின்றார் என்பதும் இதனால் அறியலாம்.

வீரைக் கவிராசர் இயற்றிய பிற நூல்களாவன. சௌந்தர்யலகரி, ஆனந்தலகரி, வராகி மாலை, ஆனந்த மாலை என்பனவாகும் சௌந்தர்யலகரி ஆனந்த லகரிக்கு 16ம் நூற்றாண்டில் வாழ்ந்த புகழ்பெற்ற புலவரான சைவ எல்லப்பநாவலர் சிறப்பான உரை இயற்றி யுள்ளார். வீரைக் கவிராசர், கவிராசர், இராசர் என்ற பெயர்களால் அழைக்கப்பெற்றவர்.

தேவி வழிபாட்டில் ஈடுபட்ட கவிராசர் தேவியைப் பற்றின நூல்களையே படைத்துள்ளார். அவ்வகையில் அமைந்த படைப்புக்களே, திரிபுரை மாலையும் மனோன் மணி மாலையும் ஆகும்.

ஆதிசங்கராசாரிய சுவாமிகள், வடமொழியில் இயற்றிய மந்திரச்சிறப்புடைய நூல் சௌந்தர்யலகரி, ஆனந்த லகரி, என்ற இரண்டுமாகும். நூறு சுலோகங்களையுடையன இரண்டும். முதல் 49 சுலோகங்கள் கைலையங்கிரியில் சிவபெருமானால் திருவாய் மலர்ந்தருளியவை என்றும் அதனைத் தொடர்ந்து 51 சுலோகங்களை ஆதிசங்கரர் இயற்றினார் என்றும் அறிஞர் கூறுவர்.

கவிராசர் மொழிபெயர்த்த சௌந்தர்யலகரி பாயிர உரைப்பாடலில், "இன்ன தன்மைய நூலினைக் கவிராசராச வரோதயன், மன்னன் அம்பிரமாதிராயன் வடித்தரும் பொருள் கூறவே, கன்னலஞ்சிலை வேளெனும் கவிராசபண்டிதன் வீரையான் சொன்னயம் பெறு காவியக்கவி சொல்லவென்று தொடங்குவான்" என்று குறிப்பிட்டுள்ளார்.

கவிராசராசபிரமாதிராயன் என்ற அறிஞர் வடமொழி நூலுக்கு அரிய பொருளைச்சொல்ல, வீரைக் கவிராசன் காவியமாகச்செய்யத் தொடங்கினன் என்பது கருத்து.

எனவே பாயிர உரையில் கூறப்பெறும் இரு கவிராசர்களும் வேறுவேறு என்பதும், வீரைக்கவிராசரே, சௌந்தர்யலகரி ஆனந்த லகரியைத் தமிழில் பாடியவர் என்பதும் விளங்குகின்றது.

திரிபுரை மாலை-மனோன்மணி மாலை இரண்டுக்கும் சௌந்தர்யலகரி, ஆனந்த லகரி இரண்டுக்கும் உள்ள ஒற்றுமைச்சிறப்பையும் நாம் அறிய முடிகின்றது.

சௌந்தர்ய லகரி தமிழ்ப்பாடல்களில் கவிராசர் குறிப்பிட்டுள்ள தேவியின் திருநாமங்களை மட்டும் இங்கே ஒப்பிட்டுப் பார்க்கலாம்:

ஆதிசக்தி(1) யாமளை(2) அதிரஞ்சகி, மோகன வஞ்சகி, மாதா(5) நீலி கபாலி(6) கோமாது (7) பூமாது(8) ஆதிசுந்தரி(12) மதங்கி(22) விமலை(33) விசயை(49) கமலை(56) பூரை(60) அமலை(61) தருண மங்கலை(75) மூலபரை(97) சுந்தரி(99) நாதரஞ்சுகி(103) ஆகியவை, சௌந்தர்யலகரி ஆனந்த லகரியில் கூறப் பெற்றவை.

மற்றும், திரிபுரை மனோன்மணிமாலை பாடல் 38, 43, 44, 62 ஆகியவற்றில் தேவியின் அருள்பீடச் சக்கரங் களைப் பற்றின நுட்பமான செய்திகள் உள்ளன. இவை சௌந்தர்யலகரி 11ம் பாடலிலும் மற்ற பாடல்களிலும் அமைந்துள்ள நுட்பங்கள். இவற்றை, தேவி வழிபாட்டு வல்லுனர்வாய் கொண்டு அறியவேண்டும்.

மற்றும் தேவி வழிபாட்டுக்குரிய யோகமுறை வழி களையும், சௌந்தர்யலகரி போன்றே, திரிபுரை மனோன் மாலை குறிப்பிடுகின்றது.

மற்றும் சிறப்பான செய்தியொன்றும் அறிய வேண்டும். கவிராசர் பாடிய சௌந்தர்யலகரி 17ம் பாடலில் "செந்தமிழில் வடகலையின் முதுமொழிக் காவியத் தெளிபாடல் செய்யுமாறே" அருள் புரிய வேண்டுகின்றார்.

இப்பாடலின் குறிப்பை நோக்குமிடத்து, கவிராசர், சௌந்தர்யலகரி பாடியபின்பே செந்தமிழில், திரிபுரை மாலை மனோன்மணி மாலையைப் பாடினார் என்பதும் அறிய முடிகிறது.

திரிபுரை மாலை பாடல் 25ல், முன்குறிப்பிட்டவாறு ''சங்கத்தில் செந்தமிழ் பாடுதற்குக் சாந்நித்தியமாய் என் அங்கத்தில் நின்று அருள் புரிவாய்'' என்று குறிப் பிட்டிருப்பதுடன் ஒப்பு நோக்கற்பாலது. இதுபோல், பாடல்கள் 11, 38-இரண்டிடங்களிலும் குறிப்பிட்டுள்ளார்.

## பராபரை மாலையில் கண்ட செய்திகள்

பராபரை மாலை. பதிப்பு 1924 ஆண்டு: பதிப்புரை: ''பராபரை மாலை பாடிய அம்பிகாபதி என்பார் வேம்பத்தூர்ச் சங்க வித்வான்களில் ஒருவரும் ஸ்ரீ சங் கராசாரிய ஸ்வாமிகளால் ஈச்வரி பேரில் கூறிய வட மொழிச் சௌந்தர்யலகரி, ஆனந்தலகரி இவைகளைத் தமிழில் பாடியவரும், ஆனந்த நாயக மாலை பாடிய வரும், இராமநாதபுரம் ஜமீனைச் சேர்ந்த வீரசோழனில் பன்னெடுங்காலம் வசித்து வந்தவரும் மதுரை மீனாட்சி யம்மை யடியிட்ட பூமாலை திருக்கழுத்தில் தானே ஏறும் படி பாடித் தம்முடன் வாதிட்ட புலவர்களை வென்று, நல்லூர், கடம்பை இவ்வூர்களைப் பரிசாகப் பெற்ற வரும் தனஞ்சய கோத்திரத்தினருமாகிய கவிராச பண்டிதரின் குமாரராவார். தந்தையினும் சதமடங்கு தனையன் என்ற பழமொழிக்கு இணங்க தேவி பக்தி யினும் செய்யுள் செய்யும் திறமையிலும் மிகத் தேர்ச்சி பெற்றவர். ஞானவாசிட்டம் பாடிய ஆளவந்தான் நிம்பை மாதவ பட்டர் இவருடைய சகோதரராவார்.

''இவ்வம்பிகாபதி, பராபரை மாலை பாடியதன்றி திருநெல்வேலி முக்தீசர் பேரில் நெல்லை வருக்கக் கோவை பாடியுள்ளார்.

''திருநெல்வேலியைச் சேர்ந்த கரிவலம்வந்த நல்லூரில் இருந்து ஆட்சி புரிந்த அதிவீரராமபாண்டி யன் வேண்ட நாலூர்ப் பெயரும் ஒருபாவில் அமையப் பாடியவர். பல்லக்கு முதலிய விருது பெற்றவர். இவர்

இளமையிலேயே இறந்தார். இவர் பிரிவுக்கு ஆற்றாது, கவிராசர் பாடிய பாடல்:

“பாவிலும் தூய்ய பராபரை மாலையைப்
பாடியிட்ட
நாவிலும் தீப்பற்றுமோ தெய்வமோ நன்
னறுங்கமலப்
பூவிலும் தூய்ய பிரான்அம்பி காபதி
பொற்பமரும்
தேவிலும் தூய்ய திருமேனி நீறெழும்
போதினிலே”

இப் பராபரை மாலை பதிப்புரையில் கூறப்பெற்றிருக்கும் குறிப்பின்படி, கவிராசர் அந்தணர் என்பதும், வேம்பத்தூர்த் தமிழ்ச் சங்கப் புலவர் என்பதும், தேவி வழிபாட்டினர் என்பதும், அற்புதங்கள் பல புரிந்த தமிழ்ப் புலவர் என்பதும், இக்கவிராசருக்கு அம்பிகாபதி, மாதவ பட்டர் என்பார் குமாரர் என்பதும் அறியப்படும் செய்திகளாகும்.

கவிராசரின் புதல்வரில் ஒருவரான மாதவ பட்டர்; ‘ஞான வாசிட்டம்’ தமிழில் பாடியதன்றி, பாகவதத்தையும் இயற்றியவராவார்.

என் ஆசிரியப்பிரான் மகாமகோபாத்யாய டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் பதிப்பாக திருப்பதி ஸ்ரீ வெங்கடேசுவரர் அறக்கட்டளையினரால் வெளியிடப்பெற்ற பாகவதம் மாதவபட்டர் இயற்றியது என்பதும், இவருக்குச் செவ்வைச் சூடுவார் என்பதும் ஒரு பெயர் என்பதும் அறியலாம்.

வேம்பத்தூருக்கு ‘நிம்பை’ என்பது மறு பெயர். இம் மாதவபட்டரை நிம்பை மாதவபட்டர் என்றும் செவ்வைச் சூடுவார் என்றும் கூறுவர் என்பர் [16ம் நூற்றாண்டு தமிழ்ப் புலவர் வரலாறு; சோமசுந்தர தேசிகர்: பக் 78]

கவிராசரைப்பற்றி, சுவையான வரலாற்றை, ச. சோமசுந்தரதேசிகர் எழுதிய புலவர் வரலாறு (16ம் நூ. பக் 61-66ல்) கூறப்பெற்றிருப்பதையும் ஈண்டு குறிப்பிடுகின்றேன். வரலாறு வருமாறு:

பாண்டி நாட்டில் வீரசோழன் என்று பெயர் பெற்ற ஊருக்கு வீரை என்பது மறுபெயராகும். இவ்வீரைப் பதியில் கவிராசர் தோன்றியவர். அவ்வூருக்கு அருகில் உள்ள வேம்பத்தூரில் வாழ்ந்தவர். வேம்பத்தூரில் வாழ்ந்த அந்தணக் குடும்பத்தினரில் ஒருவரான கவிராசரின் முன்னோர் வீரைப்பதியில் சென்று குடியேறியவர்கள்.

கவிராசரின் இயற்பெயர் யாதென்று அறியமுடியவில்லை.

சௌந்தர்ய லகரி நூலில் கவிராசர் பாடல் ஒன்றில் ''கன்னல் அஞ்சிலை வேள் ஏனும் கவிராச பண்டிதன் வீரையான்'' என்று கூறிக்கொள்கின்றார்.

இறுதிப்பாட்டில் 'கவிராச பண்டிதன் வீரையான்' என்றும் தம்மைக் குறிப்பிட்டுள்ளார். இக் கவிராசர் தமிழ், வடமொழி இரண்டும் நன்கு பயின்றவர். இவருக்கு அம்பிகாபதி என்னும் புதல்வன் ஒருவன், கவிஞனாக விளங்கினான்.

இக் கவிராசர், இளமையில் உமாதேவியின் அருள் பெற வேண்டி, உரிய மந்திரம் ஒன்றை ஒரிலக்கம் கணக்கில் உருவேற்றியதால் உமை இவருக்குக் காட்சி அளித்தாள். அப்போது இக் கவிஞர், பைந்தமிழ்ப் பாக்களால், உம்மையம்மையின் எழிலையும் அங்கச் சிறப்புக்களையும் பாடினார். அம்மை. கவிராசரின் பாடல் கேட்டு மகிழ்ந்தாள். கவிராசரை நோக்கி,

''பெண்ணுடனே பிறவாதவர் போன்று இப்பண்ணுறு பாடலைப் பகர்ந்தனையே'' என்று கூற இக்கவிராசர், ''விண்ணும் மண்ணும் வெறுப்பினும் என் வாய் நண்ணுறு மாறு நவின்றிடும்'' என்று பதில் கூறினார்.

இவ்விதம் துணிவுடன் கூறிய கவிராசரைச் சோதிக்க, அம்பிகை திருவுளம் கொண்டாள். கவி ராசரின் நாவைப் பேச முடியாமல் உள்ளிழுக்கச் செய்தாள். உடனே கவிராசர் பேச நாவின்றி அம்மை யை வணங்கி மனத்தால் ஒரு நிலைப்பட்டு வழிபடவே திரும்பவும் அம்பிகை அருள் புரிந்தாள்.

இவ்வாறு அம்பிகை, கவிராசரின் நாவிழக்கச் செய் தமைகண்டு, பொறாத சிவபெருமான் அம்பிகையிடம் அதற்குப் பரிகாரமாக, ''கவிராசனுக்கு உன்கையால் உணவு செய்து கொடுக்க வேண்டும்'' என்று கூறினார்.

அதன்பின்னர் கவிராசருக்குத் திருமணம் நடந்தது. அம் மனைவியிடம் கவிராசருக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. சில நாட்களில் கவிராசரின் மனைவி இறந் தாள். கவிராசர், காசியாத்திரை செல்ல எண்ணினார். தன் பெண் குழந்தை வளர்ந்த பருவம். அதனால் அப் பெண்ணைத் தன் தங்கையிடம் ஒப்படைத்துவிட்டு காசிக்குப் பிரயாணம் செய்தார். நீண்ட பயணத்தில், ஒருநாள் ஒருகாட்டில் மரநிழல் உள்ள இடத்தில் படுத்து உறங்கினார்.

அப்போது உமையம்மை, கவிராசரின் பெண் வடிவத் துடன் தோன்றினார். உணவுப் பொருட்கள் உள்ள மூட்டையுடன் தோன்றினாள். விழித்து எழுந்த கவிராசர், தம் பெண்ணைக் கண்டு வியப்புற்றார். ''நீ எப்படி வழி நடந்து வந்து என்னைக் கண்டாய்?'' என்று கூறி, மனம் மகிழ்ந்தார், பெண் உணவு ஆக்கி, அன்புடன் கவிராசருக்கு அளித்தாள். கவிராசர் மகிழ்ந்தார். பின்

ஞர் தம் பெண்ணுடன் காசியாத்திரையைத் தொடர்ந் தார். காசியை அடைந்தார். காசிவிசுவ நாதரை வழி பட்டார்கள். பின்னர் காசியில் கடைத் தெருவைச் சுற்றிப்பார்த்தார். ஒரு வளையல் கடையைக் கண்ட வுடன், மகள், தனக்கு வளையல் வேண்டுமென்றாள். கவிராசர் கைப்பொருள் இல்லாமையால் கலங்கினார்.

அப்போது தமிழ்நாட்டு அன்பன் ஒருவன் எதிர்ப் பட்டான். கவிராசருடன் பேசினான். வளையல் வாங்கு வதற்குப் பொருள் உதவியும் புரிந்தான்.

இவ்வாறு தம்மகளுடன் காசியாத்திரை முடிந்து. ஊருக்குத் திரும்பினார் கவிராசர். ஆறு மாதங்கள் கடந்து ஊருக்குச் சமீபம் வந்தார். ஊருக்கு அணிமை யில் வந்தவுடன், ஒரு மரத்தடியில் ஓய்வு எடுத்துக் கொண்டு உறங்கினார். அப்போது அவர் மகள் "அப்பா, நான் முன்னதாக வீடு செல்கிறேன்." என்று கூறி விரைந்து சென்றாள். அகிலாண்டே நாயகி அல்லவா? போகும் போது நூறு வயதுக்கிழவி வடிவம் கொண்டு கவிராசரின் தங்கை வீட்டை அடைந்தாள். 'கவிராசர் காசியாத்திரை முடிந்து வருகிறார்' என்று கூறி விட்டு மறைந்தாள்.

கவிராசர் வீட்டுக்கு வந்தார். தம் தங்கையுடன், தம் மகளும் இருப்பதைக் கண்டார். தந்தையைக்கண்ட மகள், மகிழ்ச்சிகொண்டு பேசினாள். கவிராசர் காசிக்குச் சென்றது முதல் மகள் நோய்வாய்ப்பட்டு வருந்தியதை யும் சொன்னாள் தங்கை. கவிராசர் உள்ளம் பூரித்தார். 'அகிலாண்டநாயகியின் திருவிளையாடலை' அறிந்து மகிழ்ச்சி பொங்க அன்னையை எண்ணிப்போற்றினார்.

இவ்வாறு புலவர் புராணம் உடையார் கூறுவதாக, புலவர் வரலாற்றில் கூறப்பெற்றுள்ளது.

திரு அனவிரத நாயகம் பிள்ளை என்ற அறிஞர் எழுதிய தமிழ் வரலாற்றில் (பக் 442) "கவிராசர் செங் கோட்டையில் விளங்கியவர்" என்பர். இதற்கு வேறு சான்றில்லை. புலவர் புராணமுடையார் கூற்றின்படி கவிராசருக்குப் பெண் குழந்தை ஒன்று இருந்ததாக மட்டுமே அறியலாம்.

ஆனால் பராபரை மாலை பதிப்புரையில் கூறப் பெற்ற சரித்திரமும், சோமசுந்தர தேசிகர் எழுதிய புலவர் வரலாறு கூறும் சரித்திரமும், விரிவான செய்திகளைக் கூறுகின்றன.

எனவே அருள் கவிஞர் வரிசையில் கவிராசர் சிறப் பான இடத்தைப் பெற்றவராவார்.

மாந்தர், செய்கருமம் விட்டமையாலும் வினைவயத் தாலும், பூத பிசாசம் போன்றவைகளால் அல்லல் உறுவதையும், நோயால் வருந்துதலையும் போக்கு தற்கும், பிற நல்லருள் பெறவும் திரிபுரையின் வழி பாட்டைக் கூறி, திரிபுரைமாலை மனோன்மணி மாலை இரண்டையும் இயற்றியுள்ளார் ஆசிரியர். மாந்தர் இம் மாலைகளை, தூய்மையுடன் உள்ளம் ஒருமைப்பட்டு, பாடி, திரிபுரையின் நல்லருள் பெறுவாராக.

சுபம்

உ

முருகன் துணை

# பழனி மாலை

மொய்தார் அணிகுழல் வள்ளியை வேட்டவன் முத்தமிழால்
வைதாரையும் அங்கு வாழவைப் போன்வெய்ய வாரணம்போல்
கைதான் இருப துடையான் தலைபத்தும் கத்தரிக்க
எய்தான் மருகன் உமையாள் பயந்த இலஞ்சியமே

பழனியில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளி யிருக்கும் முருகக் கடவுளைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு, பாடப்பெற்றது இப்பழனி மாலை. விநாயகர் காப்புச் செய்யுள் முதலாக முப்பத்தொரு பாடல்களைக் கொண்டது இம்மாலை நூல்.

## நூலாசிரியர்

பழனிமாலை பாடிய ஆசிரியர் யார் என்பது பற்றி, வரலாறு, குறிப்பாகச் செய்திகள் எதுவும் இம்போது அறியமுடியவில்லை; பழனி மாலை இறுதிப் பாடல் 31. ல் ''கோமான் தமிழ்க் கொற்கையூர் காவலன் மிகக் கூறும் செஞ்சொல்'' என்று குறிப்பிடப்படுகின்றது. எனவே இப்பழனி மாலை, கொற்கையூர் காவலன் என்பவரால் பாடப் பெற்றதென்று அறியலாம். கொற்கையூர் என்பது, பாண்டிய நாட்டின் பழமைத் துறைமுகப் பட்டினமான 'கொற்கை' எனக் கருத முடிகிறது. பழமையில் சிறப்புற்றிருந்த கொற்கை நகர் பிற் காலத்தில் ஒரு சிற்றூராகி விட்டது என்பதும் அறியலாம். முத்துக்கள் விளையும் சிறப்புடையது கொற்கை. 'கொற்கை முத்து' என்பது உலகப் புகழ் பெற்றதாகும்.

எனவே பழனிமாலை பாடிய ஆசிரியர், பாண்டியநாட்டு நகரான கொற்கையில் அரசனாகவோ, தலைவனாகவோ இருந்தவர் என்ற அளவில்தான் செய்திகள் அறிய முடிகின்றது.

## பழனித் தல வரலாறு

சேயோன் மேய மைவரை உலகமும்' என்பது தொல்காப்பியம். தமிழகத்தில் மலைகளை இருப்பிடமாகக் கொண்ட கடவுள் முருகன் என்று கூறுவது தொல்காப்பியத்தில் கண்ட உண்மை.

மலையுறை தெய்வமான முருகனைப் பற்றி, சங்க இலக்கியங்கள் கூறும் சிறப்பான செய்திகளை நாம் அறிவோம். பத்துப்பாட்டில் ஒன்றான திருமுருகாற்றுப் படை முருகனை வழிபடுவோரை ஆற்றுப் படுத்தும் நூல்.

முருகனுக்குரிய ஆறுபடை வீடுகளைத் திருமுருகாற்றுப்படை செப்புகின்றது; நக்கீரர் பாடிய நூல் திருமுருகாற்றுப்படை. பரிபாடல் என்னும் சங்க நூலிலும் முருகனைப் பற்றின சிறப்பான செய்திகள் உள்ளன.

ஆறுபடை வீடுகளில் ஒன்றே திருவாவி நன்குடி என்ற பழனித்தலமாகும். பழனித்தலத்தில் கோயில் கொண்ட முருகனைப்பற்றி பல நூல்கள் உண்டு; சிறப்பாக, முருகன் புகழ் பாடிய அருணகிரிநாதரின் திருப்புகழில் பழனி பற்றின பாடல்கள் சிறப்புடையன. பழனித் தலத்துக்குரிய புராணம் ஒன்றும் 'பழனித்தல புராணம்' என்ற பெயருடன் படைக்கப் பெற்றுள்ளது. என் ஆசிரியப் பெருமானாகிய மகாமகோபாத்யாய டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள், 'பழனிப் பிள்ளைத்தமிழ்' என்ற நூலைப் பதிப்பித்துள்ளார்கள்.

சின்னப்ப நாயக்கர் என்பவர் அப்பிள்ளைத் தமிழ் பாடியவர். 31 பாடல்களைக் கொண்டது. பிள்ளைத் தமிழ். மிக்க சுவைதரும் பாடல்களைக் கொண்டது பிள்ளைத் தமிழ். மற்றொரு பிள்ளைத் தமிழ் நூலும் இருந்ததென்று ஸ்ரீமத் ஐயரவர்கள், குறிப் பிட்டிருக்கிறார்கள். பழனிமலைப்பதிக்கு, திருவாவிநன் குடி, வைகாவூர், சிவகிரி எனப் பல பெயர்கள் உண்டு கடைச்சங்க காலத்துக் கடையேழு வள்ளல்களில் ஒருவ னான வையாவிக்கோப் பெரும்பேகன் ஆவிநன்குடி நகரில் ஆட்சி புரிந்தவன்; பழனி மலைக்குப் பொதினி மலை என்ற பெயரும் உண்டு.

## பழனி முருகன் வரலாறு

தொல்காப்பியத்தில் முருகனை மலைவாழ் தெய்வ மாகக் குறிப்பிட்டது போல், பழனி மலைக்குரிய தெய்வ மான முருகனைப்பற்றி இதிகாச வரலாறும் விரிவாக உள்ளது. கச்சியப்பமுனிவர், கந்த புராணம் என்ற பெருங்காப்பியத்தில் விரிவாகக் கூறியிருக்கிறார். வட மொழியில் 'ஸ்காந்தம்' முதலிய பல நூல்கள் பழமை யானவை உள்ளன. வான்மீகி இராமாயணத்தில் முருகனின் அவதாரச் சிறப்பு உள்ளது வடமொழியில் மகாகவி காளிதாசன் எழுதிய குமாரசம்சவம் புகழ் பெற்றது. நன்னசேரழன் எழுதிய குமாரசம்பவம் புகழு டையது.

தமிழ்தந்த தெய்வமாக, முருகன் பெருமை பெற்றவன்; எனவே பழனிமலை முருகனின் வரலாறு நாம் படித்து இன்புறவேண்டிய தொன்றாகும். இதிகாசம் கூறும் வரலாறு காண்போமாக.

நாரதமுனிவர், பிரமனைக் காண்பதற்காக ஸத்ய லோகத்துக்குச் சென்றார். இசைவல்லவரான நாரதர்,

ஆயிரம் நரம்புகளைக் கொண்ட மகதி என்னும் யாழை கைக்கொண்டு பிரமதேவனுக்குமுன் இன்னிசை ஒலி எழுப்பிப் பாடினார். பிரமன் மகிழ்வுற்றார். நாரதருக்கு, உயர்ந்த மாதுளம் பழம் ஒன்றை அளித்தார். நாரதர் மாதுளங்கனியுடன் புறப்பட்டார். கயிலைமலைக்குச் சென்றார். சிவபெருமானை வணங்கி, அவரிடம் அக் கனியை அளித்தார். சிவபெருமானுடன் அமர்ந்திருந்த விநாயகரும், முருகரும் அந்தக் கனியை விரும்பிக் கேட்டனர். இருவரில் யாருக்குக் கொடுப்பது என்று சிவபெருமான் தயக்கம் கொண்டு யோசித்தார். அங்கிருந்த நாரதர் முதலான முனிவர்கள், தேவர்கள் யாவரும் சிவபெருமானுக்கு யோசனை கூறினார்கள்,

''அண்டம் முழுவதும் ஒரு நாளில் வலம் வந்து விடவேண்டும்; முதலில் யார் வலம் வருகின்றார்களோ, அவரே பரப்பிரும்மமாவார். அவருக்கே மாதுளங்கனி உரியதாகும்''

இவ்வாறு அனைவரும் தீர்மானித்துக் கூறியதை, சிவபெருமான் ஒப்புக்கொண்டார். இந்த நிபந்தனையை விநாயகர், முருகன் இருவரும் நிறைவேற்ற முன் வந்தனர். முருகன், தன் மயில் வாகனத்தில் அமர்ந்து அண்டத்தை வலம்வர, விரைந்தார்.

விநாயகர், யோசித்தார்.

முருகனோ வான்வீதியில் உலாவினார்.

''எங்கணும் பணி வதனங்கள்

எங்கணும் விழிகள்

எங்கணும் திருக்கேள்விகள்

எங்கணும் கரங்கள்

எங்கணும் திருக்கழலடி

எங்கணும் வடிவம்

எங்கணும் செறிந்து அருள்செயும்
அறுமுகத் திறைக்கே

இவ்வாறு முருகன் விரைந்தார், என்று பழனித்தல புராணம் கூறுகின்றது.

முருகன் மறைந்தபின் விநாயகப் பெருமான் உபாயம் கண்டறிந்தார். பரப்பிரும்மமானவரும் அனைத் துயிர்களுக்கும் சார்பிடமானவருமான சிவபெருமானை, வலம் வந்தார். சிவபெருமானுக்கு முன் நின்றார்.

''தந்தையே, தங்களை வலம் வந்தால் அண்ட முழுவதும் வலம் வந்ததாகும்; மாதுளங்கனியை எனக்குக் கொடுக்கவேண்டும்'' என்றார். அனைவரும் அதுவே நியாயம் என்று கூறினார்கள்; மனம் உவந்து மாதுளங் கனியை விநாயகரிடம் அளித்தார் சிவபெருமான். கனி பெற்ற விநாயகர் ஆனந்தக் கூத்தாடினார்.

அப்போது, முருகன், அங்கே வந்து சேர்ந்தார். விநாயகரின் கரங்களில் கனியிருக்கக் கண்டார்; கடுஞ் சினம் கொண்டார் முருகன்; நிகழ்ந்ததை நாரதர் தெரி வித்தார். கோபப்புன்னகை செய்தார் முருகன்.

தாம் அணிந்திருந்த மகுடகுண்டலங்களையும் பொன்னுடை, பொன்மாலைகளையும் கழற்றி எறிந்தார். மயிலையும் விடுத்தார். வேல்முதலிய ஆயுதங்களையும் விடுத்தார். தண்டம் ஒன்றைக் கையில் தாங்கினார். தென்திசை நோக்கி மறைந்தார். தமிழகத்தில் தேவகிரி என்ற இடத்தை அடைந்தார். அங்கே தவம் செய்து கொண்டிருந்த முனிவர்கள் முருகனை வழிபட்டு அருள் பெற்றார்கள். முருகன் அங்கிருந்து திருவாவிநன்குடிக்குச் சென்றார் அங்கே சிவகிரி என்ற சிறப்பான மலையில்

அமர்ந்தார். முருகன், தண்டதரராகத் தனிமையில் அங்கே எழுந்தருளியிருந்தார்.

முருகனின் செயல்கண்டு மனம் வருந்திய உமையம்மை, சிவபெருமானுடன், திருவாவிநன்குடிக்கு வந்தனர். முருகனின் தனிமைகண்டு ஆறுதல் கூறினர். தாய் தந்தையரைக்கண்ட முருகன் சினம் தனிந்து வணங்கினார். சிவபெருமான் இருகைகளாலும் முருகனை வாரி அணைத்து மடியில் வைத்துக் கொண்டு அன்பு மொழிகள் கூறினார். உமையம்மையும் முருகனைத் தழுவி உச்சி மோந்து அன்புரை கூறினார்.

''கந்தா வருக உலகமெல்லாம் கணத்தில்
புடைபோய் வந்தவொரு
காரே வருக மாதுள நற்கனிக்கு
பிரிந்தோய் வருக எவ்வுயிர்க்கும்
எந்தாய் வருக வேள்வருக இனியோய்
வருக எவ்வுயிர்க்கும் ஏந்தால்
வருக தண்டதர ஏறே வருக
எங்கள் திரு
மைந்தா வருக சிவகிரிநேர்
வாழ்வே வருக இன்புள
மணியே யணியே
வருக நலம் வந்தாய் வருக
அருள் சுரக்கும்
சிந்தே வருக ஆவினன் குடியிற்
திருவே வருக வருகவே
தேவே ஞானப் பழம்நீ வருக
செல்வா வருக வருகவே

(பழனிப்பிள்ளைத்தமிழ்)

சிவபெருமான் முருகனிடம் கூறினர். ''முருகா, கண் மணியே, உனக்குக் கோபம் ஏன்? என்றும் இளமை யுடையவனே, அறிவே வடிவானனே, நீயோ சிறுவன்? பெரியவரில் பெரியவன் நீ! மாதுளங்கனியும் உனக்கு ஒரு கனியா? நீயோ பேரின்பப்பழம்! சிவஞானப்பழம்! பழம் நீயாக இருக்கும்போது வேறு பழமும் வேண்டுமோ! மகனே, நானும் சக்தியும் ஒன்றான வடிவம் நீ! என் ஐந்துமுகமும் அம்மையின் ஒருமுகமும் சேர்ந்த ஆறுமுகம் நீ!''

இவ்வாறு சிவபெருமான் கூறவே மனம் மகிழ்ந்தார் உமையம்மையார் முருகனை அணைத்துக்கொண் டார் ''பழம் நீ அப்பனே! ஞானப்பழம்நீ! சிவஞானப் பழம்நீ'' என்று மகிழ்ச்சியுடன் கூறினார்.

அம்மையும் அப்பனும் முருகனை, 'பழம்நீ' என்று அழைத்த சிறப்பால் முருகன் வீற்றிருக்கும் சிவகிரி, பழனிமலை என்று புகழ்பெற்றது. முருகனுக்கும் பழனி யப்பன் என்ற பெயர் பரவியது.

''ஈசனுருகி மடியினில் வைத் தென்றும்
இளையோய் அறிவுடையோய்
தேசுதரும் நம் வாணுதற்கண் மணிநீ
சிறுவனோ பெரியைநீ
வாசநறு மென்கனியு மொருகனியோ
மதுரமொழி வாயால்
பேசவரிய மறைஞானப் பிள்ளைப்
பழம்நீ எனப் புகன்றார்

(பழனித்தலபுராணம்)

கூறுடையாளும் குன்றாக் குணப்பெருங்
குன்றும் ஞானப்

பேறுடைப் பழம்நீ என்னப் பெயரதுமருவி
எங்கள்
ஆறுமா முகன் வைகும் நகரமும்அன்று
தொட்டு
வீறுதொல் பழனி என்றே விளம்பின
உலக மூன்றும்
(பழனித் தலபுராணம்)

இவ்வாறு பழனிமலை பற்றியும் பழனிமலை முருகன் சிறப்புப் பற்றியும் வரலாறு கூறப்படுகிறது.

## பழனி மாலைச் சிறப்பு

பழனிமலையில் கோயில்கொண்டு எழுந்தருளியுள்ள முருகனை, பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு அவன் மீது காதல்கொண்ட தலைவியின் கூற்றாக அமைந்துள்ள பாடல்களைக் கொண்டது இம்மாலை. அகத்திணை மரபு அமைதிகொண்டு அமைந்துள்ளது, இம் மாலை. ஒருபாற் காதலாகிற 'கைக்கிளை' அமைதியுடையது எனலாம் 'இம்மாலைப் பாடல்கள் கலித்துறை அமைதி பெற்றும் பெறாமலும் உள்ளமையால் விருத்தக் கலித்துறையில் அமைந்தவை எனலாம்.

இம்மாலை முப்பது பாடல்களில், சில பாடல்கள் நற்றாய் கூற்றாகக் கொள்ளலாம். அவை பாடல் 15, 24, 28, 29 ஆகியவை. 21ம் பாடல் பாங்கி கூற்றாகக் கொள்ளலாம். மற்ற அனைத்தும் தலைவீ கூற்றாகவே அமைந்துள்ளன எனலாம்.

இந்நூலாசிரியர் கொற்கையூர் காவலன், தமிழ் மரபறிந்தவராய், முருகனிடம், பேரன்பு பூண்டவராக, முருகனிடம் காதல்கொண்ட ஒரு தலைவியின் கூற்றாக நயம் சிறக்க இம்மாலையைப் பாடியுள்ளார்.

## பழனி மாலை ஏடு

ஓர் ஏட்டுச்சுவடியே, (ஓலைப்பிரதியே) இந்நூலகத்தில் கிடைத்துள்ளது; ஏடுகள் மிகவும் சிதிலமாக உள்ளன. சில ஏடுகளில் சில பாடல்களின் சில வரிகள் சிதைந்து பழுதுபட்டு விடுபட்டுள்ளன. கிடைத்தவற்றை அவ்வாறே பதிப்பிக்கப்படுகிறது.

## பாடல் நயங்கள் சில

தலைவி, தன்னிடம் காதல்கொண்டு பழகிய முருகன் பரத்தையரிடம் தொடர்பு கொண்டது அறிந்து ஊடல் கொண்டு சினந்து ஏசுகிறாள்.

பரத்தையிடம் சென்றுவந்த காரணத்தால் முருகனின் மேலாடையில் மஞ்சள் வாடையைக் கண்டறிந்து சினந்து கூறுவதாக அமைந்த பாடல் நயமுடையது.

"வாகிட்ட போர்வைதனில் வீசுகின்ற மஞ்சள் வாடை மோகிட்டு நின்ற உமைபாலா" (பா.2) என்பது அறியலாம்.

தன்மீது காதல் கொண்ட முருகன் பரத்தையிடம் அடிக்கடி சென்று வருவது கண்டு பொறாத தலைவி கூறும் கூற்று சிறப்பாக உள்ளது: "நான் நாலு மூன்று பிழை பொறுத்தேன். பரத்தையிடம் போய்வருவதை நீ நிறுத்தவில்லை. பொய் பேசுகின்றாய். என்னைத் தொட்டுப் பழக அஞ்சித் தடுமாறுகிறாய்" என்கிறாள்.

"நாலு மூன்று பிழை பொறுத்தேன். முந்தித் தொடாது ஏன் பொய்யுரைத்தாய்" (பா. 4) என்பது அறியலாம்.

மற்றும், 'பழனிக்கதிபதியே, என்னிடம் ஒப்புக் கொண்டவாறு நடந்துகொள்ளும். உம்முடைய பழக்க மெல்லாம் சந்தைப் பரத்தையிடம் வைத்துக்கொள்ளும். அந்தப் பகட்டை என்னிடம் காட்டாதீர்'' என்று கூறு வது நயமானது.

''வந்தொப்பினபடியே நடவீர், உம் மார்க்கமெல்லாம் சந்தைப் பரத்தையர்க் கேற்கும். அந்தப் பகட்டை விடீர்'' (பா. 6) என்பது அறியலாம்.

''முருகா, உனக்குப் பலமாதர் உண்டு. என்னிடம் வருவதாகச் சொன்ன கெடு தப்பிவிட்டது. பரத்தையின் வார்த்தையைக் கேட்டு அவளுடன் இருக்கின்றாய். இது உனக்கு நேர்மையாக இருக்கிறது. எனக்குப் பொறுக்க முடியவில்லை'' என்று தலைவி ஆற்றா மையை வெளிப்படுத்துகிறாள்.

''சொல்லிவந்த கெடுத்தானும் தப்பிப் பழிகாரி வார்த்தையைக் கேட்கில் உனக்கு அடுத்தால் எனக்குப் பொறுக்காது'' (பா. 8) என்பதில் நயம் உள்ளது.

தன்னிடம் காதல்கொண்ட நாளில் முருகன் தலை தொட்டு ஆணையிட்டபடி, நடந்துகொள்ள வில்லையே, என்று தலைவி மனம் நொந்து கூறுவதாக உள்ள பகுதி நயமானது:

''பொய்யோ அந்நாள் தலைதொட்டாணையிட்டது'' (பா. 9) ''பிரியாததுபோல் தலைதொட்டு ஆணையிட் டனையே'' (பா. 18) ''கூசாது முந்தித் தலைதொட்டுச் சந்தியில் கோட்டி கொள்வது ஆசாரமோ'' (பா. 22) என்றுள்ள பகுதிகள், தலைதொட்டாணையிடும் மரபைக் கூறுவனவாகும்.

முருகனின் பிரிவைப் பொறுத்துக் கொள்ள முடியாத தலைவி கூற்றும் நயமானது:

''கதிர்போம் மதிவந்திடும், அந்திப்போது உடலம் வேம், குயில் கூப்பிடும், தெருவீதியில் தேமாங்கனி சிதறி, தேன்சிந்தும், பிரிந்தாயே'' என்கிறாள் (பா.12)

மற்றும் தலைவியின் துயரக்கூற்று (பா. 10) மிக நயமானது;

''வேள்கணைக்குக் கரும்பாச்சு, கணைக்கு இலக்காச்சு, கருத்தலைவாய்த் துரும்பாச்சு, நெஞ்சு பகையாச்சு, மனது துரும்பாச்சு, இருகொங்கைகளும் பொருப்பாச்சு'' என்றுள்ள பகுதி பொருள் சிறப்பு சொல்லாட்சி நயம் நிறைந்தவையாகும்

''நீச்சாச்சு உன்னாசை, நிலையாச்சு, உனக்கவள் மூச்சாச்சு, பிரீதியும் ஆச்சு, இவ்வுலகில் ஏச்சாச்சு, எனக்கு நிந்தை ஆச்சாச்சு'' என்று அமைந்திருப்பவை மிகவும் பொருள்நயம் சொல்நயம் கொண்டவையாகும். இதுபோன்றே சொல்நயம் பொருள்நயம் மிக்க பாடல் (பா. 5)

''கொடிக் கொடி மின்னிட வள்ளி குணத்தை யெல்லாம் படிப்படி கேட்டது, பொடிப்பொடி,—
நீ துடுக்காய் அடிக்கடி வரலாமோ'' (பா. 3) என்று அமைந்துள்ள பாடல் முழுமையாக இல்லை.

''தூறாச்சு அன்னை வசை, உடல்மாறாச்சு,
மதி பகையாச்சு, வார்த்தை கவண் ஏறாச்சு
கண்ணிரண்டும் ஆறாச்சடா'' (பா. 13) என்பது

மிக நயமானவை, அன்னைவசையும் ஊரார் ஏசலும், பிரிவை மிகுதிப்படுத்தும் நிலாக்காலத்தையும் கூறித்

தன் கண்கள் ஆறாச்சு என்று தலைவி கூற்றாக அமைந்துள்ள சிறப்பைக் காணலாம்.

நற்றாய் கூற்றாக 15ம் பாடல் உள்ளது.

''பயிலாள், எனை முகம் பாராள், பாரறிய மயிலாய், அயிலாள், விழிதுயிலாள், கயிலாச வாசன் புதல்வா'' என்றுள்ள பகுதி நயம் அறிந்தின்புறற்பாலது.

முருகனையே நம்பியிருக்கும் தலைவி, தன்னைப் பிரிந்த முருகன் பரத்தையிடம் சென்றுவிட்டதைப் பொறாமல், ''ஆற்றினில் கரைத்த புளியோ'' என்று தன் காதல் உள்ளத்தை உவமிக்கும் அழகு மிக நயமானது. (பா. 16) மற்றும் ''பரவையிலே விட்டவாய் இது'' என்று (பா. 23) கூறுவதும் நயம் கொண்டது; மேலும் அப்பாடலில் ''பலகாலும் என்றன் மரபை அழிக்கக் கங்கணம் கட்டியவாறு நன்று'' என்று எல்லை மீறிய காதல் உள்ளத்தால் முருகனை இடித்துக் கூறும் பகுதி மிகு சிறப்பானது.

தலைவி, முருகனின் பிரிவாற்றாமையால் மெலிவுற்றாள். பலமுறை அவனை அழைத்தாள். அவன் பாராமுகமாக இருக்கிறானே என்று சினம் கொள்கிறாள்.

என் காதலன் ஒருமுகமும் இருகாதுகளும் உள்ளவனாயிருந்தால் நான் முறையிடுவதைக் கேட்பான். முருகனுக்கு ஆறுமுகமும் பன்னிரண்டு செவிகளும் இருக்கின்றனவே. எப்படி என்*முறையீட்டைக் கேட்க வைப்பது என்று நயம்படக் கூறுகிறாள் தலைவி.

''ஏறாது பன்னிருகாதுக்கும், நான் செய்வது ஏது'' (பாடல் 25) என்பது நயம் அமைந்தது.

நற்றாய் தன் மகள் நிலைகண்டு, முருகனிடம் குறையிரந்து முறையிடுகிறாள். ''உன் கையில் பிள்ளை

உனக்கே உடைக்கலம்'' (பா 28) என்பது நயம். மாணிக்கவாசக சுவாமிகள் திருவெம்பாவையில் கூறிய முதுமொழியை இங்கே பொருத்தியிருக்கிறார் ஆசிரியர்.

செந்தமிழ் பயின்ற ஆசிரியர் கொற்கை காவலன்' பழனிமலைப் பாடல்களில், தமிழ் யாப்பமைதிக்குரிய மோனை எதுகைத் தொடைச்சிற..புள்ள சொற்றொடர் களை நன்கு அமைத்துள்ளார்.

இம்மாலையில், 'துடுக்கு, ஆச்சு, போச்சு, பகட்டு, போட்டி, அடா, சும்மா, தெட்டி விட்டு, போன்ற வழக்குச் சொற்கள் இடம் பெற்றுள்ளன. வம்பி, கள்ளன் , சரவை, சன்னை, செப்பிடுவித்தை, மாமா, ஆர்' என்ற சொற் றொடர்களும் உள்ளன.

பிரீதி, ஆசாரம், மார்க்கம், சதம், ஆங்காரம், தூஷணித்து, கங்கணம், சனம் என்ற வடசொற்களும் எடுத்தாளப்பட்டுள்ளன.

தமிழ் இலக்கிய வளர்ச்சியில் வளரும் இலக்கிய மரபில் இப்பழனிமாலை சிறப்புக்குரியதொன்றாகும்.

## கும்பேச்சுர மாலை

கும்பேச்சுர மாலை என்பது, சோழநாட்டில் புகழ் பெற்ற காவிரித் தென்கரைத் தலங்களுள் ஒன்றாகிய கும்பகோணத்தில் கோயில் கொண்டுள்ள சிவபெருமானாகிய கும்பேச்சுரர் மீது பாடப்பெற்ற மாலை நூல் ஆகும்.

இம்மாலை நூல் இனிய செந்தமிழ்ப் பாக்களால் அமைந்த ஒன்று. பெரும்பான்மை கட்டளைக் கலித்துறை யாப்பமைதி கொண்ட பாடல்களை உடையது.

இம்மாலைநூலில் காப்புச் செய்யுள் உட்பட 63 பாக்கள் உள்ளன. ஓலைச் சுவடிநூல். ஒன்று மட்டுமே கிடைத்துள்ளது. கிடைத்த ஏடுகளுள் 'செல்' அரித்துப் பழுதுபட்டுள்ளன. சுவடியில், 9-வது பாடல் முதல் 44-ம் பாடல் முடிய 36 பாடல்களுக்குரிய ஏடுகள் இல்லை. மற்றும் சில பாடல்கள் முழுமையாகவும் இல்லை. சுவடியில் உள்ளவை, உள்ளவாறே இம்மாலை பதிப்பிக்கப்பட்டுள்ளது. ஆசிரியர் 100 பாடல்கள் பாடியிருக்க வேண்டும் எனத் தெரிகிறது.

### நூலாசிரியர்

இம்மாலை நூலை இயற்றிய ஆசிரியர் பெயர் முதலியன புலனாகவில்லை; வேறு சான்றுகளும் இப்போது கிடைக்கவில்லை.

கும்பேச்சுர மாலைப் பாடல் 48-ல், ஒருகுறிப்பு காணப் பெறுகின்றது. ''படை நெடுங் கண்ணியர் பந்தாடும் மாமறுகே பரிந்தும், இடைகெழு வான் கொடிபோல் விண்ணுரிஞ்ச விளங்கு புத்தூர், இடமது மேவியிருந்து எனை வாவென்றது என்னுரையாய், கொடை பொழி மேகமன்னார் வாழ் குடந்தைக் கும்பேச்சுரனே'' என்று பாடியிருக்கின்றார்.

"விளங்கு புத்தூர் இடமது மேவியிருந்து எனை வாவென்றது என்னுரையாய்" என்ற வரிகள் சிறிய குறிப்பைத்தருகின்றது அறியலாம். இம்மாலை ஆசிரியர், புத்தூரில் வாழ்ந்தவர் என்று கருதமுடிகிறது. புத்தூர் என்ற தலம், அரிசிற்கரைப்புத்தூர் எனத் தெரிகிறது. குடந்தைத் தலத்துடன் தொடர்பு கொண்டு, அணிமையில் உள்ள புத்தூர் அரிசிற் கரைப்புத்தூர் என்பது அறியலாம். எனவே இம்மாலை பாடிய கவிஞர், அரிசிற் கரைப் புத்தூரில் வாழ்ந்தவர் என்ற செய்தி அறிய முடிகின்றது.

இக்கவிஞரின் பெயர் முதலியன இப்போது தெரியவில்லை என்றாலும், அரிசிற்கரைப் புத்தூரில் வாழ்ந்த தமிழ்ப்புலவர் இவர் என்பது தெளிவாகின்றது.

இம்மாலையின் பாக்களையும், கருத்துக்களையும் பிற சிறப்புக்களையும் அறியும் போது, இக்கவிஞர், சிறந்த சைவநெறித் தொண்டர் எனலாம். தேவாரம் முதலிய திருமுறைகளில் இக்கவிஞர் பெரிதும் ஈடுபாடு கொண்டவர் என்பதும், கும்பேச்சுரனை வழிபட்டுப்பேறு பெற்றவர் என்பதும் அறியமுடிகிறது.

சிவவழிபாட்டுச் சிறப்புக்களையும், அதன் பயனையும் உள்ளம் உருகப் பாடியுள்ளார். தேவாரம் முதலான திருமுறைக் கருத்துக்களைப் பாடல்களில் நயம்பெறப் பெய்துள்ளார் என்பதும் அறியலாம்.

இம்மாலை 15ம் பாடலில் "கொச்சையிலாச் செந்தமிழ்க் குடந்தை" என்று ஆசிரியர் கூறுவது, தமிழில் இவருக்குள்ள பற்றைப்புலப்படுத்துகின்றது. செந்தமிழில் இவ்வாசிரியருக்கு மிகுந்த ஈடுபாடும் நன்மதிப்பும் இருந்தமையால், இவர் பாடல்களும் செந்தமிழ்ப் பாங்கில் அமைந்துள்ளன.

59ம் பாடலில், ''என் சிந்தை கொண்டு பாவிளங் கோல இசைபாடத் தந்த பரிசது என்னே'' என்று என்று ஆசிரியர் கூறுவது, இசையுடன் இம்மாலையைப் பாடுமாறு அமைத்துள்ளார் என்பது பெறப்படுகின்றது.

அடுத்து, 61-ம் பாடலில், "தடம் கெடிலத்தார் இச் சொற்களில்தான் வியந்தார்" என்றும் இம்மாலைப் பாடல்களைச் சிறப்பித்துக் கூறியுள்ளார்.

சிவபெருமானிடம் எல்லையற்ற பற்றும் சிறப்பாகக் கும்பேச்சுரரிடம் ஈடுபாடும் கொண்டு, புத்தூர்க் கவிஞர் பாடியது கும்பேச்சுர மாலை.

## குடந்தைத் தலச் சிறப்பு

சோழவள நாட்டில் காவிரியாற்றின் தென்பகுதியில் விளங்குவது குடமூக்கு என்னும் கும்பகோணத் தலமாகும். சைவ சமய நாயன்மார்களால் பாடல் பெற்ற தலம். இத்தலத்தில் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள இறைவன் திருநாமமே ஆதிகும்பேச்வரன் என்பதாகும்.

இத்தலத்தைப் பற்றியும், கும்பேச்சுரப் பெருமானைப் பற்றியும், வடமொழியில் பவுடிகம், பிரமாண்டம், காந்தம் முதலியவற்றில் எடுத்துரைக்கப் பெற்றுள்ளது. தமிழ் மொழியில், என் ஆசிரியப்பிரான் உ. வே. சாமிநாதையரவர்களுடைய ஆசிரியராகிய மகாவித்வான் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களால் தமிழ் மொழியில் புராணமாகச் சிறப்புடன் இயற்றப் பெற்றுள்ளது. மற்றும் சொக்கப் புலவர் என்பார் கும்பகோணத் தலபுராணம் ஒன்றும் இயற்றியுள்ளார். மற்றும் இத் தலம் பற்றின குடந்தையந்தாதி, என்ற ஒருநூலும் உள்ளது; மேலும் பல நூல்கள் இத்தலப் பெருமை கூறுவன உள்ளன.

## தலச் சிறப்பு

கும்பகோணத்தை நடுநாயகமாகக் கொண்டு மருதீசர் முதலான பதினாறு தலங்கள் உண்டு. இக் கும்பகோணத்தலம் ஐந்து குரோசம் அளவுள்ளது எனப் புராணம் பகரும். காவிரியின் தென் கரையில் அமைந்து, பாஸ்கர க்ஷேத்திரம் என்ற பெயரும் கொண்டது.

இத்தலத்தில், பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை பிருகஸ்பதிதேவர், சிம்மராசியில் வருகின்ற கும்ப மாதத்தில் (மாசி மாதப் பௌர்ணமியோடு கூடின மக நக்ஷத்திரத்தில், தலதீர்த்தமான மகாமக தீர்த்தத் தோடு பொருந்திய கன்னியர் தீர்த்தத்தில், மக்கள்

நீராடி சிவபெருமானின் திருவருளைப் பெறுவது தனிச் சிறப்பாகும்.

கன்னியர் தீர்த்தத்தின் வடகரையில் ஒன்பது கன்னியர் உள்ள விசுவநாதர் கோயில், கீழ்க்கரையில் அபிமுகமாக உள்ள அபிமுகநாதர் கோயில், மேல்கரையில் கௌதமர் கோயில் வடமேற்கில் வில்வாரண்யத்தில் பாதாளலிங்கேசர் என்ற நாகேசர். நாகேசர் கோயிலுக்கு வடமேற்கில் சோமலிங்க நாயகர் கோயில், அதனை அடுத்து இடப்பாகத்தில், சாரங்கதரர் கோயில், அதற்கு வடபால் சுதரிசனர் என்ற சக்ரபாணி கோயில் உள்ளன.

காவிரிக்கு வடதிசையில் வரதராசர் கோயில் தெற்கிலே வராகர் கோயில், உள்ளன. சாரங்கபாணி கோயிலுக்கு வடகிழக்கிலே பாண புரேசர் கோயில் உள்ளது. கும்பகோணத்தை சூழ, ஐந்து குரோச எல்லையிலே ஐந்து தலங்கள் உள்ளன.

குடந்தை நகரின் நடுவண் கும்பலிங்கேசர் வீற்றிருக்கின்றார். அம்பிகையின் திருநாமம் மங்கள நாயகி. கும்பேசரின் சந்நிதியில் பொற்றாமரை என்ற புண்ணியத் தீர்த்தம் உள்ளது.

ஆதிகாலத்தில் சிவபெருமான், கும்பகோணத் தலத்தின் இடம் முழுவதையும் அமிர்தத்தால் நனையச் செய்தார். அதனால் புனிதமான தலம் அது.

மேருமலையில் பிரமன், சிவபெருமான் கட்டளைப் படி நீரையும் அமுதத்தையும் கலந்து மண்ணைப் பிசைந்து கும்பம் ஒன்றைச் செய்தான். பூணூல் சாத்தினான். அக்கும்பத்துள் அமுதத்தை நிரப்பினான். சிருட்டிபீசத்தையும் வைத்தான். தேங்காய் மாவிலை வைத்து

தருப்பையால் கூர்ச்சம் செய்து வைத்தான். புதிய ஆடை சார்த்தி வில்வத்தளிர்களால் அருச்சனை செய்தான். அக்கும்பத்தை உறியில் வைத்தான்.

மகாபிரளய காலத்தில், நீர்மயமான பரப்பில் அந்த உறிக்கும்பம் அசைந்து மிதந்தது. தெற்கு நோக்கிச் சென்றது. கிழக்குக் கடலுக்கு மேற்கே, அக்கும்பம் மிதந்த போது, தருப்பையும் மாவிலையும் வீழ்ந்தன மாவிலை வன்னிமரமாகவும், தருப்பை அம்மர நிழலில் இலிங்க வடிவமாகவும் மாறியது. அதனால் அந்த லிங்கத்திற்கு தருப்பை லிங்கம் எனப் பெயர். அவ்விலிங்கத்தை ஏழு மங்கையர் நீர் வடிவமாக இருந்து பூசித்தனர்

அந்தக் கும்பமானது, வாயுதிக்கிலே ஒரு குரோச தூரம் சென்று தங்கியது. பிரளயம் வடிந்தது. சிவ பெருமான் அசரீரியாக, ''இத்தலமே சிறந்தது'' என்று திருவாய் மலர்ந்தருளினார். பிரமன் உறியுடன் கூடிய அமுத கும்பத்தை அடைந்தார்; அந்த உறியானது தனியே பிரிந்து அணிமையில் தங்கிச் சிவலிங்கமாக மாறியது. தேங்காயானது, தனியே தங்கி ஒருதென்னை மரமாகத் தோன்றியது. அதன்கீழே சிவலிங்கம் ஒன்று தோன்றியது. இந்த லிங்கம் நாரிகேள லிங்கம் எனப் படும். வில்வத் தளிர்கள் வில்வ மரமாக மாறின. அங்கே பாதாள லிங்ககேசர் தோன்றினார். பூணூலானது ஒரு லிங்கமாகத் தோன்றியது அதனைச் சூத்திரநாதலிங்கம் என்பர். இவை யாவும் சேர்ந்த கும்பலிங்கத்தை க்ஷேத்திர பீஜகும்பம் என்று கூறினர்.

சிவபெருமான் கும்பத்தைக் காணவிரும்பி வேடன் வடிவம் கொண்டு வில்லும் அம்பும் ஏந்தித் தோன்றி னார். சாஸ்தா என்ற ஐயனார், தாம் ஓர் அம்பைக் கொடுத்தார். கும்பத்திலிருக்கும் அமுதத்தைக் எங்கும் பரவச் செய்யக் கோரினார். சாத்தன் கொடுத்த அம்பு

சிவபெருமானால் ஏவப் பெற்று வலியிழந்தது. சிவபெருமான் புன்னகை பூத்து 'உன் அம்பு விடுத்ததைப் பார்த்தாய்' உன் அம்பு விடுத்த காரணத்தால் 'ஏக பாண சாஸ்தா' என்ற பெயருடன் பாணதுறை என்ற பெயர் கொண்ட இவ்விடத்தில் தங்குவாயாக' என்று கூறினார்.

பின்னர் சிவபெருமான் தம் அம்பை எடுத்து கும்பத்தை நோக்கி எய்தார். அவ்வம்பு கும்பத்தின் மூக்கைச் சிதைத்துக் கவிழ்த்தது. கும்பத்திலிருந்து புறப்பட்ட கோணமானது ஒரு யோசனை தூரம் சென்று விழுந்து ஓர் லிங்கமாகத் தோன்றியது. அவ்விடத்தையே குடவாயில் என்பர். கும்பத்திலிருந்து பெருகிய அமிர்தமானது நான்கு பக்கமும் பரவியது. சிவபெருமான் அம்பு விடுத்த இடம் பாணபுரி என்று பெயர் கொண்டது கும்பத்தின் அமுதம் தேங்கிய இடத்தையே அமுத வாவிகள் என்று கூறினர் பெரியோர் வேடனாக வந்த சிவபெருமான், அமுதம் நிரம்பி வழிவதைக் கண்டு, கும்பத்தை அணுகி அமுதம் கலந்த மண்ணை கும்பத்தில் சேர்ந்து, ஓர் இலிங்கமாக்கி, தாமே பூசனை செய்து, அதனுள் புகுந்து தம் வேடவடிவை மறைந்துக் கொண்டார்.

இந்தத்தலத்தையே கும்பகோணம் என்று அழைக்கப் பெற்றது. சிவபெருமான் கும்பத்தில் இடம் பெற்றதாலும், குடம் தோன்று முன்னாகிய கும்பத்துத் தோன்றியதாலும் அக்கடவுளுக்கு ஆதிகும்பேசர் என்ற பெயர் உண்டாயிற்று. அமுத கும்பத்தில் தோன்றியதால் அமுத கும்பேசர் என்றும் அழைக்கப் பெற்றது.

பார்வதி தேவி, கும்பேசரை வணங்கித் துதித்தாள். சிவபெருமான் அருள் கூர்ந்து, பார்வதி தேவியைத் தமக்கு வடக்குத் திசையில் இடம் பெறச் செய்தார்.

தேவியார், சிவபெருமான் கட்டளைப்படி, வலப் பக்கத்துத் தலத்திலே, சிவபெருமானின் இடப்பாகத்தே வீற்றிருந்தார். பிராட்டியார் வீற்றிருக்கும் இடம் மந்திரபீடம் என்று புகழ் பெற்றது. வழிபடுவோருக்கு ஸர்வ மங்களங்களையும் தருவதால் மந்திரபீட நாயகி மங்கள நாயகி என்று பெயர் வழங்கப் பெற்றது.

''ஆரணா மந்திரபீட நலத்தள்'' என்று பெரியோர் கூறுவர்.

இத்தகைய கும்பேசர் மங்கள நாயகி வீற்றிருக்கும் கோயிலைப் பிரமன் வழிபட்டுப் பேறுபெற்றார்.

மகாமக தீர்த்தக் கரையிலே கும்பேசரை நவகன்னி யர் அருச்சனை செய்தனர். சண்டி வழிபட்டாள். கிருத வீரியன், சுதன்மன், வீரவன்மன், ஞானவான், ஏமவாகு முதலியோர் வழிபட்டுப்பேறு பெற்றனர்.

மங்கள நாயகியை வழிபட்டுச் சுவர்ண ரோமன் பேறு பெற்றான் மற்றும் கருமசன்மன், மரந்தாதா, இந்திரன், சூரியன், சுவாகுகன், காசிபன், காமதேனு அகத்தியர், சோழன், ஆராவமுதனாகிய திருமால் ஆகியோர் வழி பட்டுப் பேறுபெற்றனர்.

இத்தகைய சிறப்புப் பெற்றது கும்பகோணத்தலம்.

## கும்பேச்சுர மாலைச்சிறப்பு

இம்மாலையின் சிறப்பான சில செய்திகளைத் தேவாரக்கருத்துக்களுடன் நினைவு கூர முடிகின்றது. சிவபெருமானை மலர்கொண்டு அருச்சித்தலும், அவர் திரு முன்நின்று தலைவணங்கி அவர் உருவை மனத்தில் பதியவைத்தலும், நல்லசிந்தையுடன் இருத்தலும் ஆகிய செய்யாதவர் வினையினின்றும் எப்படிப் பிழைப்பார்கள் என்று ஆசிரியர் கூறுகிறார்.

(பா. 3)'' வான்மலரால் பணியார், கண்ணிணை களிப்ப ஆடி முடிதாழ்த்துச் சுகம்கொண்டு நில்லார், அப்பால் விரும்பி மடிவிடு சிந்தையராய்த் திகழார், உய்யுமாறது என்னே''

பா 38ல் ''மலர் ஈசற்கு எனக்கொய்யவுறார் என் பெறுவார்'' என்பன அறியலாம். மற்றும், சிவனடியார்களுக்கு, பிச்சையிடவேண்டும் என்பதைக் குறிப்பிடுகிறார்.

பா 38. ''ஐயமிடார் இன்சொல்தான் உளரயார்'' (பா 58ல்.) ''எள்ளளவேனும் பிச்சையிடுமதற்கே குழையா மனக் கொடியேன் என் செய்வேன்'' என்று தன்னையே குறிப்பிட்டுக் கொள்கிறார். ''இரப்பவர்க் கொன்றீய மாட்டேன் என் செய்வான் தோன்றினனே'' ''-என்ற 'அப்பர் தேவாரப்பா நினைவு கூறத்தகும்.

இக் கருத்துக்கள் தேவாரத்தில் கூறப்பட்டதை நினைவு கூறலாம். ''பூவினைக் கொய்து மலரடிபோற்றுதும் நாம் அடியோம்'' (ஞானசம்பந்தர்)

''தோடுலாம் மலர்கள் தூவித்தொழ மார்க்கணடன்'' (ஞானசம்)

''உண்பதன் முன் மலர் பறித்திட்டுண்ணாராகில்'' (அப்பர்)

''தோடுலாம் மலர்கள் தூவித் தொழுதெழுமார்க் கண்டன்'' (அப்பர்)

''சாலமா மலர் கொண்டு சரண் என்று மேலையார் விரும்புவர் ''(ஞானசம்)

''தொழுது தூமலர்தூவித் துதித்து நின்று அழுது காமுற்று அரற்றுகின்றாரை'' அப்பர். ''நித்தலும் நியமம் செய்து நீள் மலர்தூவி'' (ஞான)

''குடம் எடுத்து நீரும் பூவும் கொண்டு தொண்டர் ஏவல் செய்ய'' - அப்பர்.

''மலர் தூவி நினைந்தெழுவார் உள்ளம் நீங்காது'' அப்பர்.

மற்றும் சிவபெருமான் மறைபாடுவார் என்று மாலை ஆசிரியர் கூறுகிறார்:(பா 4)''அருமறை ஓதிப்பல அண்டமும் படைத்து'' - இக்கருத்தைத் தேவாரப் பாக்களில் நினைவு கூறலாம்.

''பாடும் மறையினன்'' (ஞான)
''மறைபாட லோடாடலும் எண்ணினார்'' (அப்பர்)
''நான் மறைகள் பாடினான் காண்'' (அப்பர்)
''பந்தரத்து நான்மறைகள் பாடினான் காண்''
(அப்பர்)
''பண்ணின் மறை பாடலோ டாடலும்'' (அப்பர்
''மந்திர மறையதோதி'' (அப்பர்)
''வேதம் நான்கும் விரித்து ஓர் நம்பி'' (சுந்தரர்.)

திருமாலும் பிரமனும் சிவபெருமானின் அடிமுடி காணாததைச் சிறப்பிக்கின்றார்: (பா 4) திருமலரானும் கடல்மேல் துயின்ற திறலரியும், கரிபொரு கண்ட நிற் காணாது அலம்வர''என்பது இக்கூற்றை,தேவாரனத்தில்

காணலாம்: ''திருவினார் போதினானும் திருமாலும் ஓர் தெய்வம் உன்னி தெரிவினாற் காணமாட்டார்'' (ஞான) வடவால மரத்தின் கீழ் நால்வர்க்குச் சிவபெருமான் மறை உரைத்ததைக் கூறுகிறார்: ''பண்டாலின் கீழ் அரும் நான் மறைஓதி'' (கும். பா. 6) இதற்கு இணையாக தேவாரத்துக் கூற்றுக்களை இங்கே அறியலாம்.

''கல்லாலில் இருந்தான் தன்னை, கற்பமாய் அடியார்கட்கருள் செய்தானை'' (அப்பர்)

''அன்றாலின் கீழ் இருந்து அறம் சொன்னானை'' (அப்பர்)

''வடவாலின் கீழ் இருந்தங் கீரிருவர்க் இரங்கி நின்று நேரிய நான்மறைப் பொருளை உரைத்து'' (ஞாசைம்)

''ஆலடைந்த நிழன் மேவி அருமறை சொன்ன தென்னே'' (ஞானசம்)

''ஆலின் கீழ் நால்வர்க்கு அறத்தான்'' (அப்பர்)

சிவபெருமானை ஆராவமுது என்று குறிப்பிடுகின்றார்: (கும். பா. 6) ''பொன்னிமண்டலத்துள் ஆராவமுதொத்த.'' இக்கருத்து, ''ஆரமுதம் ஆனாய் போற்றி (அப்பர்) ''அடியார்கட்கு ஆரமுதம் ஆனாய் (அப்பர்) ''அடியார்கள் உள்ளத்தேன் அங்கத்து அமுதுமாகி உள்ளூறும் தேனை'' (சுந்தரர்) என்பவற்றை நினைவு கூர்தற்குரியதாகும்.

சிவபெருமானின் திருக்காட்சியைப் பின்வருமாறு கூறுகிறார்: (கும்.பா.10) ''நதிகொள் மதியும் நஃகுதலை மாலையும் திகழ்திரையால் குதிகொள் சடைக்கற்றை எந்தாய்'' என்றும் (பா 11ல்) ''மலரும் கலைவெண் மதியும் கடுவாயும் வடிகொள் புனலும் எருக்கிள வன்னியும் ஊமத்தினொடு செடிகொள் தலையும் இளவானம் மீனுரு சினப்பன்றியும் குடிகொளச் சடைக்கற்றை''

என்றும் (பா 22ல்), "மதியொடு கொன்றையும் வாளரவும் திரை கள் கொண்டார்க்கும் செழுஞ்சடை தாழ்த்தி" என்றும் (பா 27ல்) "ஆர்த்திட்ட நாகத்தயல் சினக்கொடு வாவைத்து அம்புனலை சேர்ந்திட்ட மாடு செழுமலர்க் கொன்றையந்தேன் சோர்ந்திட போர்த்திட்ட வான்கரித் தோல் மேற் புரளமுடைத்தலைகள் கோர்த்திட்ட நாடகம்" என்றும் கூறுகின்றார். இச்சிறப்புக்களையும் தேவாரத்தில் உள்ள சிறப்புக்களையும் நினைவு கூர வேண்டும்:

"வெண்டலைப் பிறை கொன்றை மாவும் வேரிமத்தமும் விரவி முன் முடித்த இண்டை மாமலர்ச் செஞ்சடையானை" (சுந்தரர்) என்றும்

"நீரின்மலி புன்சடையர் நீளரவு கச்சையது"
(ஞானசம்)
"வன்னியும் மத்தமும் மதிபொதி சடையினன்"
(ஞான)
'கைம்மாவின் உரியானை" (சுந்தரர்)
"புலியதளே உடையாகத் திரிவான்" (அப்பர்)
"அரவொடு என்பும் ஆமை காய்ந்தவன்" (அப்பர்)

என்றும் உள்ள பகுதிகள் அறியத்தகும்.

சிவபெருமான் கூத்தாடிய சிறப்பையும் அரங்கையும் உமையாள் பாடல் பாடியதையும், அதன்பயனையும் அதனைக் கண்ட ருத்திர கணங்களையும் பற்றி ஆசிரியர் கூறுகின்றார்:

(கு. பா 12, 39, 40)

"ஆடிய கூத்தும் அரங்கின் பெருமையும் ஆயிழையாள் பாடிய பாட்டும் அப்பாட்டின் பயனும் பவித்திரமாய் நீடிய லோகமும் காண்பவர் எவர் நின் நினைந்து பல, கோடியராம் ருத்திரர் " (12) என்றும்

"அண்டர்கள் தேசு பெறு முனிவோர் அரமாதர் மிகு தொண்டர்கள். நாரதாதி தொகு கணங்கள் பண்டவர்க் கெக்காலமும் பணிய........................ கொண்டனை ஆடவல்லாய் திருக்கூத்து என்றும் (39) "பாறடர்ந்த வேலினை ஏந்தி விளையாடி நின்னுமை யாள் பரவக், கோலினை கூத்தென்றும் ஆடவல்லாய்" எறுன்ம் உள்ளபகுதிகளைக் (40) காணலாம்.

"அண்டமெல்லாம் அழித்து சூலம் கொண்டு உமை காண சிவன்ஆடும்" என்றும்

வரைமகள் காண........................குரை கழல் ஆர்க்கும் (22)

இக்கருத்து, தேவாரப் பாக்களில் உள்ளவற்றுடன் நினைவு கூரத்தகும்:

"காடு நின் இடமாகக் கடுவிருளில் நடமாடும் வேடனே" - (சுந்தரர்)

"கைம்மாவின் உரியானைக் கரிகோட்டில் ஆடல் உடையானை" - (சுந்தரர்)

"தில்லையம்பலத்தாடுகின்ற முத்தா" - அப்பர்

"மறை பாடலோடாடனும் எண்ணினார்" (அப்பர்)

என்பன போன்ற பல பாடல்களைத் தேவாரத்தில் காணலாம். திருவானைக்கா என்னும் தலத்தில் சோழன் செங்காணன் முற்பிறவியில் சிலந்தியாகப் பிறந்து சிவனை வழிபட்டு பேறு பெற்ற சிறப்பை ஆசிரியர் கூறுகின்றார். (கு : பாடல். 14) "புறம் புள்ளின் வலை யொனறு புளகம் கொண்ட கோச் செங்கணான் தொழ நின்றாய்" என்பர்.

இக்கருத்து, தேவாரப் பாக்களில் மிளிர்வதைக் காண லாம்:

''தெருண்டவாயிடை நூல் கொண்டு சிலந்தி
சித்திரப் பந்தர் சிக்கென இயற்ற, சுருண்ட
சடையாய், அது தன்னைச் சோழனாக்கிய தொடச்சி
கண்டு'' (சுந்தரர்.)

திருவீழிமிழலை என்னும் தலத்தில் திருமால் ஆயிரம் மலர்கொண்டு சிவபெருமானை அருச்சித்து, ஒரு பூ குறைவதற்குத் தன் கண்ணையே மலராக அருச்சித்து, சிவனருள் பெற்ற சிறப்பை ஆசிரியர் கூறுகின்றார்.

''பெரிதாயபரம் கட்டாமரையன்றி என்று அவர் கண் கலங்கக் கொய்து, வட்டாடிச் சென்னித் தொடை யும் புனைந்த'' (கு. பா. 36) என்பது. இக்கருத்து தேவாரத்தில் கூறப்பெறும் செய்தியுடன் நினைவு கூறத்தகும்.

''திகழும் மால் அவன் ஆயிரம் மலரால் ஏத்துவான் ஒருநீள்மலர் குறைய, புகழினால் அவன் கண்ணிடந்து இடலும் புரிந்து சக்கரம் கொடுத்தல் கண்டு'' (சுந்தரர்) நீற்றினை நிறையப் பூசி, நித்தல் ஆயிரம் பூக்கொண்டு ஏற்றுழி ஒருநாள் ஒன்று குறையக் கண்டு........... நிறையவிட்டு ஆற்றலுக்கு ஆழிநல்கி'' அப்பர். என்பதும் அறியலாம்.

கிவபெருமான், திருமாலை ஒருபாகம் வைத்தும் உமையை ஒருபாகம் வைத்தும் கங்கையைச் சடையில் வைத்தும் உள்ள சிறப்பைப் பாடுகின்றார் ஆசிரியர்.
[கு. பா. 56]

''மாதையோர் பாகத்தடக்கி, மணிவண்ணனை
ஒருபால், மீதியில் பாகம்பணித்து, மின்னேரிடைச்

"செந்துவர்வாய் தாதியாம் குழற்கங்கையை
செருசடை தாங்கிய தென்னே" என்பது.

இக்கருத்து, தேவாரப் பாடல்களில் பொருந்தியிருப்பதைக் காணலாம்.

"அரியலால் தேவியில்லை ஐய
னையாற னார்க்கே" -- அப்பர்.

"நங்கையைப் பாகம் வைத்தார்.........
கங்கையைச் சடையுள் வைத்தார்" அப்பர் என்ற பகுதிகள் நினைவுகூறத்தகும்.

சைவ நாயன்மார்களில் முதல்வரான திருஞான சம்பந்தர், சமணரை வாதம் புரிந்து, அனல் வாதம், புனல் வாதம் செய்து பாண்டியனின் கூன்நிமிர்த்து வெற்றி கொண்ட சிறப்பினை ஆசிரியர் கூறுகின்றார். அப்பர் அராவிடம் தீர்த்த சிறப்பினையும் கூறுகின்றார்.

"மறைப் பொருளால் மண்ணுலகறிய, கால் நிமிர்ந்துண்ணும் கழுக்களை யாற்றில் கனலில் வெப்பில் அது, தான் நிமிர்ந்தேடிட்டு சாதித்து வாது தருக்கத் தென்னனை, கூனிமிர்த் தான்தொழ நின்றாய்" (கு. பா. 45) என்பது. சமணரைக் கழுகுகள் என்றும் கூறுகின்றார். இக்கருத்து வரலாற்றுச் சிறப்புடையதாகும்.

"புனலில் ஏடெதிர் செல்லெனச் செல்லுமே,
கனலில் ஏடிடப் பச்சென்றிருக்குமே
சின அராவிடம் தீரெனத் தீருமே" [தே. சாரம்]

"ஆரெரியிட்டு எடுத்தஏடு எதிர்போய் அணையஏற்றி
ஓர் அமணர் ஒழியாமே கழுவில் ஏற்றி"
[தே. புராண சாரம்]

என்பனகொண்டு ஆசிரியர் கூற்றை நினைவு கூறலாம். சிவபெருமான் குறியும் குணமும் இல்லாதவன் என்று

சிறப்பிக்கின்றார் "கொண்டது காட்சி குறியும்குணமும் குல்லாதவர்க்கு'' [பா. 37] என்று.இதனை "குறியிலேன் குணமொன்றிலேன்'' [அப்பர்] என்பதுடன் நினைவு கூரத்தகும்.

சிவபெருமானை வழிபட முறையோடு வராத திருமாலை நந்தி தன் மூச்சுக் காற்றால் கடலில் தூக்கி எறிந்த கதை பாடல் 46ல் கூறப்படுகின்றது.

கும்பேச்சுர மாலை ஆசியர், தேவாரப் பாக்களின் கருத்துக்களை அமைத்து செந்தமிழ் நயமுள்ள பாடல் களாக மாலையை யாத்துள்ளார் என்பது அறியமுடி கின்றது. இம்மாலை ஆசிரியர், கும்பேச்சுரரிடம் மிகவும் ஈடுபாடுகொண்டு வழிபட்டவரென்பதும், சிவனடியார் களிடம் மிகவும் நன்மதிப்புக் கொண்டவர் என்பதும் நன்கு அறியலாம்.

''உன்னையன்றி பின் நினைப்பு ஏதுமிலை இது சத்தியப்பேச்சு'' என்று (44) இறைவனிடம் முறையிடு கிறார்.

''கண்டு அதுவான பரம்வேறில்லை என்று கலந்து கொண்டேன்'' (37) என்று தன் மனவுறுதியை வெளிப் படுத்துகின்றார்.

சிவபெருமான் தம்மைச்சிவனடியாருடன் சேர்த்து ஆட்கொண்டதாக உள்ளம் உவந்து கூறுகின்றார். சிவனடியார் கூட்டத்தைச் சிறப்பிக்கின்றார்.

''நின் தொண்டருட்கூட்டி எனைத்தொழும் பிற்பட்டு இணையற்ற பரிசதுகாட்டி'' (41) என்றும் "என்மனத் திடம் கொண்டதல்லது எவையும் தந்திட்டதன்றி'' (29) என்றும்

"எனையும் தெருட்டிக்கொண்ட'' (20) என்றும். ''அச்சமிலாவண்ணம் காத்தெனை ஆண்டு''(13) என்றும்

''என்னுள்ளே மேலிட்டிருந்து''(30) ''ஊனாரவந்து என் உள்ளிடம் கொண்டனை''(24) என்றும் ''நிலைபயிலாத எளியேன் நின் தாளுற்ற கேயம்''(16) என்றும் ''என் கருத்தடங்க விண்டாய்''(6) என்றும் ''என்னைப் பற்றிக் கொண்டதென்னே''(26) என்றும் பலவாறாக விரித் துரைத்து தாம் சிவபெருமானின் அருள் பெற்ற சிறப் பைப் புலப்படுத்துகின்றார்.

''கோடா மனத்தரின் கூட்டாய குடந்தை''(32) என்றும், ''மெய்யன்பர் கூட்டத்தில்''(31) மெய்யன்பர் வாழ்வு''(30) என்று கும்பேச்சுரனை வழிபடும் சிவனடி யார் கூட்டத்தை நினைவு கூர்கின்றார். தாம், முதலில் சிவனடியாரை மதிக்காமல் இருந்ததை நினைவு கூர் கின்ற சிறப்பையும் காணலாம்: ''நன்மார்க்கமெல்லாம் நீட்டுறு மெய்யரை நிந்தித்து இடைதடுமாறி அவர், மாட்டுறு சிந்தை அகலா எனியனை''(63) என்று வருந்துகின்றார்.

சிவபெருமான் அருளைப்பெற முயலாமல் வீணே அலையும் மக்களை நொந்து கொள்கின்றார்: இவ்வகை யில் கும்பேச்சுரமாலையின் சிறப்பு, படித்து இன்புறத் தக்கதாகும்.

சிவபெருமானை வழிபடுவதற்குத் தவிர்க்க வேண்டி யதைக் கூறி வழியும் புகல்கின்றார்.

''சினம் ஆறீர், அன்பு செய்யீர், அவலக் குணம் மாறீர், எவர்க்கும் வளம் பகரீர், மனம்நொந்து நெக்கென் றுருகீர், உபாய கலைத்துறை கூறீர், எவ்வண்ணம் கும் பேச்சுரன் பேறுஅளிப்பார்?'' (54) என்று கூறும் பகுதி உள்ளத்தை நெகிழவைப்பதாகும்.

மேலும், ''விடுக்கப் பெறீர்மனை, வாடகை, விடீர் என் மேல்வினையை கெடுக்கப்பெறீர் இது எய்தாது

எனினும் அன்புள் அடுக்கம் பெறீர் இவை கூடாது எனினும் அடியவர்க்குக் கொடுக்கப் பெறீர் — எவ்வாறு கும்பேச்சுரன் பலி எய்துவான்?" (55) என்று கூறுகின்றார்.

சிவனடியார் பெருமையை இப்பாடலில் காட்டிக் காட்டுகின்ற சிறப்பு நயமானது.

இக்கவிஞர் செந்தமிழ்ப் பாக்களில் இம்மாலையைப் பாடியுள்ளார்; பக்திச் சுவைக்குரியனவாகத் தேவாரப் பாக்களை நினைவு கூறத்தக்கதாகப் பாடியுள்ளார்.

## சொல்லாட்சியில் வழக்குச் சொற்கள்

இவர் பாடல்களில், சில வழக்குச் சொற்களும் பயின்றுள்ளன. ஆச்சு, போச்சு, வாச்சு, (14) என்பன. மற்றும் பக்ஷம் என்ற வட சொல்லை பச்சம் என்றும் நித்யம் என்ற வடசொல்லை நிச்சம் என்றும் குற்றம் என்பதைக் குச்சம் என்றும் (பா 13) வழங்கியிருக்கிறார் வர்ணித்து என்ற சொல்லை வணித்து (43) என்றும் நித்தியம் என்ற சொல்லை நிச்சை (46) என்றும் ஸ்தம்பித்து என்ற என்ற சொல்லைத் தம்பித்து (23) என்றும் இஷ்டம் என்ற சொல்லை இட்டமென்றும் (29) கூறுவர் யார் என்பதை ஆர் என்று (55)ம், வாள்விழி என்பதை 'பாணவிழி' (44) என்றும் கூறுவர்.

உமையைச் சிவந்தவாயுடையவள் என்ற பொருளில் 'செவ்வாய்ச்சி' (60) என்று கூறுவர்.

மற்றும் பாட்டு என்ற பொருள் அமைதியில் பாடிட்ட, என்றும் வாடுதல் என்ற பொருள் அமைதியில் வாடிட்ட என்றும் நாடுதல் என்ற பொருள் அமைதியில் நாடிட்ட என்றும் கூடுதல் என்ற பொருள் அமைதியில் கூடிட்ட என்றும் கூறுவர்.

# திரிபுரை மாலை

## காப்பு

1 சித்திதரும் பரகதி உண்டாம் நல்ல செல்வம்
உண்டாம்
புத்திதரும் புகழ் பெருகும் அருள் தரும் பொற்பாத
மலர்
முத்திதரும் திரிபுரை மாலைதன்னைத் துணிந்
துரைக்கவே
வித்தைதரும் தந்திமுக வெள்ளை விநாயகன்
காப்பதுவே

## வசீகரம்

2 மாதரி வீரி வயிரவி காளி வாலை குண
பூதரி யோக பூரணத்தி காரணி பொற் றிகிரிவாள்
நீதரி சுந்தரி மந்திர சடாட்சரி என்றுமென்
நெஞ்சகத்தில்
ஆதரவாக நின்று உதவும் திரிபுரை ஆனந்தியே

---

திரிபுரை : திரிபுரசுந்தரி என்று அம்பிகைக்குப் பெயர். இப் பெயர்கொண்டு அம்பிகை கோயில் கொண்ட தலங்கள் திருநாரையூர், திருவான்மியூர், திருநல்லூர் ஆகியவையாகும். சக்தி வழிபாட்டில், திரிபுரை என்பது பெருவழக்கு; உலகத்தைத் தோற்றுவித்து, காத்து, அழித்து முத்தொழிலும் புரியும் பராசக்தி

திரிபுரை என்ற அம்பிகையைக் குறித்து, பாடப் பெற்ற மாலை, திரிபுரை மாலை; திரிபுரை என்பதற்கு மந்திர நூல் வழியே சிறப்பான பொருள் கூறுவர்.

1. சித்தி - நினைத்ததைப் பெறுதல். பரகதி - மேலானபிறப்பு. பொற்பாத மலர் - பொன்னாலான மலர்களைப் போன்ற பாதம்; திரிபுரையின் பாதங்கள். மாலை - திரிபுரையைப் பற்றின பாடல் களாகிற இம்மாலையை; துணிந்து - அச்சமில்லாமல் துணிவுடன். தந்திமுக வெள்ளை விநாயகன் - வெள்ளை யானையின் முகத்தைக் கொண்ட விநாயகன். காப்பு - தீமை அகலக் காத்தருள் புரிக. இப்பாடல் காப்புச் செய்யுள். பாடபேதம்: மாலை தன்னை; என்பதற்கு வாலை தன்னை என்றும் பாடம்.

2. மாதரி, வீரி, வயிரவி, காளி வாலை என்பவை அம்பிகையின் பெயர்கள். வாலை - பாலை என்றும் கூறுவர். பன்னிரண்டு

## உலக வசியம்

3 மாணிக்கம் பச்சை வயிடூ ரியத்தி மரகதத்தி
ஆணிக் கனக நிறத்திபஞ் சாட்சரத்தி அம்பரத்தி
பேணிக் கமலப் பதம் பிரதட்சிணமாய்
தொழுமவர்க்கு
தோணிக்கடாட்சம் அருள்வாய் திரிபுரை ஆனந்தியே

## சருவ வசியம்

4 அங் உங் கெவ்வும் கிரியும்சிரியும் ஐயும் கிலியும்
ஓங்கு வங்கு சிவா வென்றுரு ஓத என்முன்
சிங்கத்தி லேறி திரிசூல மேந்திச் சினந் தவிர்ந்து)
எங்கலி தீர்க்க வருவாள் திரிபுரை ஆனந்தியே

---

வயதுப் பருவத்தை வாலை என்பர். யோக பூரணந்தி - யோகத்தால் நிறைவு பெற்றவள். காரணி - அனைத்துக்கும் காரணமாக உள்ளவள். திகிரி - சக்கரம். திகிரியையும் வாளையும் நீ தரித்தவள். அந்தரி - துர்க்கை. மந்திர சடாட்சரி - ஆறு எழுத்துக்களையுடைய மந்திரமாக இருப்பவள். ஆனந்தி - எப்போதும் மகிழ்ச்சியுடன் இருப்பவள். இப்பாடல் 'ராசவசீகரம்' ஏற்பட வேண்டிப் பாடுதற்குரியது.

3. ஆணிக்கனகம்-உயர்ந்த பொன்னைப்போன்ற. பஞ்சாட்சரத்தி -பஞ்சாட்சரம் என்ற மந்திரத்தின் உருவானவள். அம்பரத்தி -ஆகாயத்தையே உடையாகக் கொண்டவள். பேணி-விரும்பி. தோணி - தோன்றி; எதுகைத் தொடை அமைதி நோக்கி, தோணி எனக்கூறப்பெற்றது. சோதி - ஒளி.

இப்பாடல் 'உலகவசியம்' ஏற்படப்பாடுதற்கு உரியது.

4. இப்பாடலில் முதலிரண்டுவரிகள் மந்திர எழுத்துக்கள். உரு - எண்ணிக்கை. சிங்கம் - அம்பிகையின் ஊர்தி திரிசூலம் - மூன்று கூரிய இலை உள்ள ஆயுதம். சினம் தவிர்த்து - கோபத்தைவிட்டு எம் கலி - எங்களுடைய (நம்முடைய) துன்பத்தை.

சினம் தவிர்த்து; சினம் தனிலே என்பதும் பாடம்

இப்பாடல் சருவவசியம் வேண்டிப் பாடப்பெறும்.

## சருவவசியம்

5 மூவுல கெங்கும் தானாகி நின்றருள் முக்கண்ணியே
சிவ்வும் கிலியும் சிங்கெனச் சவ்வும்இவ்வும் கிலியும்
மவ்வும் சிவாய நம வென்று என்றன் மனதில் வைக்க
அவ்வேளை வந்து முன்னின்றருள் திரிபுரை
ஆனந்தியே

## பகைவர் கலங்க

6 பஞ்சாட்ச ரத்தி வராகி பராபரி பயங்கரத்தி
அஞ்சு முகத்தி ஆதி பராசக்தி அம்பரத்தி
தஞ்சமென நம்பும் அன்பர்க்கு இடர்வினை
தான்நினைக்கும்
வஞ்சகர் நெஞ்சைப் பிளப்பாள் திரிபுரை வாலையுமே

## பகை விலக

7 சத்துரு சங்காரி சடாட்சரி சாம்பவி சற்குணத்தி
உத்தரி சங்காளி உமை திரிசூலி உத்தமத்தி

---

5. முக்கண்ணி - மூன்று கண்களையுடையவள்; சிவபெருமானைப் போன்று திரிபுரைக்கும் முன்று கண்கள் உண்டு.
சிவ்வும், கிலியும், சிங், சவ்வும், இவ்வும், கிலியும் மவ்வும் சிவாய நம என்பது மந்திரச் சொற்கள்.

இப்பாடலும் 'சருவவசியம்' வேண்டிப் பாடப்பெறும்.

6. பஞ்சாட்சரத்தி - சக்தி பஞ்சாட்சரவடிவமாக உள்ளவள், வராகி பராபரி, திரிபுரைக்குப் பெயர்கள். பயங்கரத்தி - தீயவர்களுக்கு அச்சத்தைத்தருபவள். அஞ்சு - ஐந்து. அஞ்சுமுகத்தி - ஐந்து முகங்களை உடையவள். தஞ்சம் என - திருபுரையின் பாதமே அடைக்கலம் என்று. இடர் - துன்பம். வினை - மந்திரவழியாகச் செய்யும் தீச்செயல். வாலை - பாலை.

இப்பாடல் 'சத்துருஜயம்' கருதிப்பாடப்பெறும்.

7. சத்துரு சங்காரி - பகைவரை அழிப்பவள். சடாட்சரி - ஆறு மந்திர எழுத்துக்களால் வழிபடப் பெறுபவள். சாம்பவி - சம்பு என்ற சிவபெருமானின் துணைவி. சற்குணத்தி - சத்துவ குணம்

நித்தம் துதிக்கும் அடியார்க்கிடர் செய்த
நீசர்தன்னை
குத்தி உதிரம் குடிப்பாள் திரிபுரை கோமளையே

8 எண்ணா தெனைப்பழித் தேசிய வஞ்சர்
இடும்பர் உடல்
புண்ணாக மெலிய அழுத்தியுன் சூலத்தைப்
புகுதவிட்டு
விண்ணோர்க்கும் ஒண்ணாச் சிங்கத்திலேறி
விரைந்து எந்தன்
கண்ணாற் காண யென்முன்நிற்பாள் திரிபுரை
காரணியே

9 அட்ட கெசங்கள் வெருவக் கிரிகள் திரிந்திடவே
வட்ட உலகம் திடுக்கிடப் பூத வாகனத்தில்
திட்டமுடன் சென்று அடையலர் தம்மைத் திரி
சூலத்தினால்
பட்டு விழக் குத்திச்செல்வாள் திரிபுரை பராபரையே

---

கொண்டவள். உத்தரி, கங்காளி, உமை, திரிசூலி என்பன திரிபுரையின் பெயர்கள். உத்தமத்தி - உயர்ந்த குணங்களுக்கு இடமானவள். நித்தம் - நாள்தோறும். நீசர் - தீயவர். குத்தி - திரிசூலத்தால் குத்தி. உதிரம் - தீயவரின் இரத்தத்தை கோமகளை - திரிபுரையின் பெயர்.

இப்பாடலும் சத்துருஜயம்' குறித்துப் பாடப் பெறும்.

8. எண்ணாது - திரிபுரையை உள்ளத்தில் நினைக்காமல். ஏசிய- இகழ்ந்த. வஞ்சராகிய இடும்பரின் உடலை. மெலிய - மெலிவுற்று வருந்த. புகுத - தீயவரின் உடலில் நுழைய. ஒண்ணா - அறிய முடியாத. காரணி: அனைத்துக்கும் காரணமாக உள்ளவள்.

இப்பாடலும் 'சத்துருஜயம்' குறித்தது.

9. அட்ட கெசங்கள் - திசை எட்டிலும் உள்ள எட்டு யானைகள். வெருவ - அச்சமுற. கிரிகள் - மலைகள். திரிந்திட - நிலை பெயர்ந்திட. பூதவாகனம்; திரிபுரையின் ஊர்தி. அடையலர் - பகைவர். பட்டு - அழிந்து.

இப்பாடலும் 'சத்துருஜயம்' குறித்தது.

## தைரியம் ஏற்பட

10 சங்கரி லோக தயாபரிவேணி சருவ உயிர்க்கும்
எங்கும் ஒருநிரையாக யிருந்தருள் ஏக சக்தி
அங்கையில் சூலமும் கபாலமும் ஏந்தி அகோரமுடன்
எங்கும் நடுங்க வருவாள் திரிபுரை ஆனந்தியே

## பகை அடக்க

11 சதுர உலகம் ஈரேழும் நடுங்க தடவரை யெட்டும்
அதிரப் பொடிபட அண்டம் குலுங்கத் தன் அன்பருடன்
எதிரிட்ட வஞ்சகர் நாவை யறுத்து இமைக்கு முன்னர்என்
மதுரத் தமிழுக்கு முன்வந்து நிற்பவள் திரிபுரை வாலையுமே

## பூதம் பிசாசம் விலக

12 வேத வேதாந்த விமலி திரிசூலி வீராரண
பூத பிரேத பிசாசுகள் நெஞ்சைப் பொடிபடவே

---

10. சங்கரி, லோக தயாபரி, வேணி, திரிபுரையின் பெயர்கள். சருவம் - எல்லாம். ஒரு நிரையாக - ஒரு தன்மைத்தாக. அருள்- அருள் புரியும். ஏக சக்தி - ஒரே சக்திஸ்வரூபமாக உள்ளவள். அங்கையில் - அழகிய கையில். கபாலம்-மண்டையோடு. அகோரமுடன் - பிறர் அஞ்சத்தக்க பேருருவத்துடன்.

இப்பாடல் பக்தர்கள் தைரியம் பெறுவதற்குப்பாடப்பெறும்.

11. சதுரஉலகம் - அகலம் நீளம் ஒத்த தன்மையை உடைய உலகங்கள். தடவரை - அகன்ற மலை. வரை எட்டு - எட்டு மலைகள். அண்டம் - பல உலகங்களும் அடங்கிய பிரம்மாண்டம் எதிரிட்ட - எதிர்த்துப் பொருத. என் மதுரத் தமிழுக்கு - என்னால் பாடப்பெற்ற திரிபுரை மாலையாகிற இனிய தமிழ்ப்பாடல்களைப் பாடுபவர்களுக்கு.

இப்பாடல் 'பகைவெல்ல' பாடப் படுவதாகும்

12. வேத வேதாந்தி - அனைத்து வேதங்களுக்கும் வேதங்களின் முடிவான பொருளுமாயிருப்பவள். விமலி, திரிசூலி திரிபுரையின்

வேத மெனும் மந்திர வாளாலே வெட்டி
விரட்டிஎனக்கு
ஆதரவாக வருவாள் அன்னை திரிபுரை நாயகியே

**பகை அழிய**

13 ஆங்காரி காரி அகோரி வசிகரி அகம்படிச்சி
நீங்காமல் என்மனச் சிந்தையில் நின்றருள்வாள்
ரீங்காரி சத்தி நிர்க்குணத்தி எந்தன்
பகையை வெட்டி
ஓங்காரி என்முன் வருவாள் திரிபுரை உத்தமியே

**பகை அழிய**

14 கையும் குவித்துத் திருப்பாதத்தைப் போற்றிக்
கருத்தில் வைத்து
ஐயும் கிலியும் சங்வுமவ்வும் அம் ஓம் கிலியும்
மனதில் வைக்கும்
சியும் சிவாய வெனவே எனக்கிடர் செய்தவரை
தீயிட் டெரிப்பாள் திரிபுரை வாலை சிவசத்தியே

---

பெயர்கள். வீரத்தையும் ரணத்தையுமுடைய பூதம், பிரேதம், பிசாசுகளின் நெஞ்சை. வேதம் எனும் மந்திர வாளால்-வேத மந்திரங்கள் என்னும் வாளினால்.

இப்பாடல் பூததோஷம் அகலப் பாடப்பெறும்.

13. ஆங்காரி - பிறரால் அடக்கமுடியாத செருக்குடையவள், காரி - கரிய நிறமுடையவள். அகோரி - உக்கிரமான தோற்றம் உடையவள். வசிகரி - அண்டம் முழுவதையும் தன் வசமாக்குபவள். அகம்படிச்சி - அசைக்க முடியாத தன்மை கொண்டவள். ரீங்காரி - ரீங் என்ற மந்திரச் சொற்பொருளானவள், சத்தி - சக்தி நிர்க்குணத்தி - மாயையின் குணம் பொருந்தாதவள். பகைவெட்டி - பகையை அரிந்து. ஓங்காரி-ஓம் என்ற பிரணவப் பொருளானவள்.

இப்பாடல் ''பகைவெல்ல' பாடப்பெறும்.

14. ஐயும், கிலியும், சவ்வும், மவ்வும் அம்ஓம் கிலியும் என்ற மந்திரச் சொற்களைக்கூறி மனத்தில் சியும் சிவாய எனவே.

## ஸ்தம்பனம்

15 தற்பரி ஆனந்தி லோகாம்பரி சர்வே சுவரியே
சிற்பரி ஞான சிவானந்தி மோகினி சின்மயத்தி
அற்புத மாக வந்தடியேனை ரட்சித் தாண்டருளும்
உற்பன மேகத் திரளொளியே திரிபுரை உத்தமியே

## மோகனம்

16 மருவே கமலக் குழல்மாதே மரகத மாமயிலே
திருவே செழுங்கண்ணி அமிர்த சிரோமணி
தேவிசத்தி
சருவே சுவரியே சதாநித்திய யோக தயாபரியே
கருவே கடாட்சம் தருவாய் திரிபுரை சங்கரியே

## உச்சாடனம்

17 சிவஞான போதகி செங்கைக் கபாலி திகம்பரியே
நவநீத காரணி நால்வேதமும் திரு நடனமிடும்

---

எனவே - என்று கூறவே.

இப்பாடல் 'பகைஅழிக்க' பாடப்பெறும்.

15. தற்பரி ஆனந்தி, லோகாம்பரி, சர்வேசுவரி, சிற்பரி, ஞானசிவானந்தி, மோகினி, சின்மயத்தி ஆகியவை திரிபுரையின் பெயர்வரிசைகள். தற்பரி - தனக்கு மேலான தொன்றில்லாதவள், லோகாம்பரி - உலகத்தையே ஆடையாகப் போர்த்தவள். சிற்பரி -பொன்மயமான பராசக்தி. சிவானந்தி-சிவம் என்ற ஆனந்தத்தில் திளைப்பவள். சின்மயத்தி - சின்மயவடிவமானவள். ரட்சித்து-காப்பாற்றி. உற்பனம் - தோன்றுகின்ற. மேகத்திரள் ஒளி - மேகக் கூட்டத்தில் புலப்படும் மின்னல் ஒளி போன்றவளே.

இப்பாடல் பிறரை 'ஸ்தம்பனம்' செய்யப்பாடுவதற்கு உரியதாகும்.

16. மருவே - மணம் நிறைந்தவளே. கமலத்தை அணிந்த குழல். குழல் - சுருட்டி முடித்த கொண்டை. மரகதம் - நவரத்தினத்தில் ஒன்றான பச்சைக்கல்லின் நிறத்தையுடைய. திரு-இலக்குமி. செழும்

தவமான் கண்ணி விநோதரி ஆரணி சங்சரியே
நவமாக வந்தென்னைக் காக்கும் திரிபுரை
நாயகியே

## ருத்திர வசீகரம்

18 கங்காளி ரூபி காளி பிடாரி கருணை மிகு
ஆங்காரி சாமுண்டி யோகினி யாமளை அம்பரத்தி
மங்காதெனும் சுடரொளியில் பிரகாச வச்சிர வல்லி
சிங்காளி மீதில் வருவாள் திரிபுரை தேவியுமே

## பார்லை தோஷம் விலக

19 மாதங்கி பத்திர மாகாளி சாமுண்டி மணிமந்திர
வேதங்கி சாயுச்சிய ரூபி விமலிசத்தி யாமளை

---

கண்ணி - வளப்பமான கண்களையுடையவளே. அமிர்தசிரோமணி - அமிர்தகலையைத் தலையில் மணியாகக் கொண்டவளே. சதா - எப்போதும். நித்திய யோகம் - நாள்தோறும் யோகநிலையிலே உள்ள. கருவே - அண்டங்களையெல்லாம் உள்ளடக்கியவளே கடரட்சம் - கடைக்கண் அருள்.

இப்பாடல் 'மோகனம்' ஏற்படப் பாடப்பெறுவது.

17. சிவஞான போதகி - சிவஞானமாகிற அறிவைப் பக்தர்களுக்கு உபதேசிப்பவளே. திகம்பரி - திசைகளை ஆடையாக உடையவள். நவநீத காரணி - புதுமைக்கெல்லாம் காரணமாக உள்ளவளே, நான்கு வேதங்களும் நடனம் செய்யும் தவமான கண்களை உடையவள்; திரிபுரையின் கண்களில் வேதங்கள் நடனம் செய்கின்றன என்பது கருத்து. விநோதரி - விளையாட்டுக்களை உடையவளே. ஆரணி-வேதவடிவானவள். சங்கரி - சங்கரனின் துணைவி நவமாக - புதுமையாக.

இப்பாடல் 'உச்சாடணம்' செய்யப்பாடப்பெறுவது.

18. கங்காளி-காளியின் ஒரு கூறு. ரூபி, காளி, பிடாரி, ஆங்காரி, சாமுண்டி, யோகினி, யாமளை முதலியன திரிபுரையைக் குறிப்பது. மங்காது - குறையுறாதது. வச்சிரவல்லி, திரிபுரையைக்குறிப்பது. சிங்கம் ஆளி என்ற இரட்டைச் சொற்கள் சிங்காளி என்று வந்தது சிங்கமகிற ஆளி; சிங்கம்.

நீதங்கி என்றன் மனதில் குடிகொண்ட நிர்க்குணத்தி
பூதங்கள் சூழ வருவாள் திரிபுரை பொற்கொடியே

## திசை கட்ட

20 வாரி சுவறிட வானம் நடுங்க வளைந்து கொண்டு
சூரி யெனவே சுரூபம் கொண்ட திரி சூலமுடன்
சீரி யெனச் சென்று பூத பிசாசைச் சிதறவெட்டும்
வீரி யோங்காரி திரிபுரை வாலையென்
மெய்த்தெய்வமே

## சகலபிணியும் தீர

21 சூலி கபாலி பிடாரி வனதுர்க்கை சூட்சி களையும்
மாலி வராகி புவனை மகேசுவரி மறைப்பதத்தி
நீலி குடோரி காந்தாரி நிர்மல நிர்க்குணத்தி
வாலை திரிபுரை என்பார்க்கு வல்பிணி
தீர்ந்திடுமே

---

இப்பாடல் 'ருத்திரவசியம்' என்பதற்குப் பாடப்பெறுவது.

19. மதங்கி முதலாக யாமளை ஈறாக, திரிபுரையின் பெயர்கள்; மந்திரச்சொற்கள். என்றன் மனதில் நீ தங்கிக்குடி கொண்ட நிர்க் குணத்தி என்க.

இப்பாடல் 'பார்வைதோஷம் அகல' பாடப்பெறுவது.

20. வாரி-கடல். சுவறிட - வற்ற. சூரி-காடுகாள்; பாலைவனத்துக் குரிய தெய்வம், கொற்றவை. சுரூபம் - வடிவம். சுவரூபம் என்பது சுரூபம் என்றாயிற்று. சீறி - சீறுபவள்; எதுகை நோக்கிச் சீரி என்றாயிற்று. சீரி - துர்க்கை என்று பொருளும் ஆம். வீரி-வீரத்தை உடையவள்.

இப்பாடல் **'திசைக்கட்டு'** என்பதற்குப் பாடப்பெறுவது.

21. சூலி முதலியன திரிபுரையின் பெயர்கள். சூட்சிகளையும் - பிறர் செய்த சூதுகளை விலக்கும். மறைப் பதத்தி - வேதங்களைப் பாதமாக உடையவள்.

இப்பாடல் **'பிணிதீர'** பாடப்பெறுவது.

## ஏவல் பில்லி விலக

22 ஆகாச மெங்கும் அனலாய் எறிந்து அகோர முற
வாகா யெழுந்து இடிபோல் முழங்கியென்
மாற்றலரை
வேகாமல் வெந்து கொடிய தீயிட்டு வேரறுத்து
ஏகாந்த மாக வருவாள் திரிபுரை யீசுவரியே

## தன்னைக் கட்ட

23 நிமலி சங்காரி நிட்களரூபி நிராமயத்தி
விமலி நிஷ்டூரி வெகுதாரணி கண்ணி வித்தகத்தி
அமலி புரந்தரி அஞ்சுமூன் றெட்டுக்கும் ஆதிமுதல்
கமலிஎனை யென்றும் காக்கும் திரிபுரை காரணியே

## தன்கட்டு

24 சூலாயுதத்தி சுடர்போல் நிறத்தி சோமகத்தி
காலாயுதத்தி கண்ணாயிரத்தி கருணாகரத்தி
மேலாயுதத்தி விடம்பனத்தி என் மேவலரை
வேலாயுதத்தை விட்டெறிப்பாள் திரிபுரை மெய்த்
தெய்வமே

---

22. எறிந்து-வீசி. அகோரம்உற - கொடுமை பொருந்த. வாகாய் - பெருத்தமாக. மாற்றலரை - பகைவரை. ஏகாந்தமாக - தனி ஒருத்தியாக. வருவாள் - காட்சி தருவாள்.

இப்பாடல் 'ஏவல் விலக' பாடப்பெறுவது.

23. நிமலி முதலிய பெயர்கள் திரிபுரையைக் குறிக்கும் மந்திரச் சொற்கள். வெகு தார்அணி - பல நீண்ட மார்பின் மாலைகளை அணிந்து, கண்ணி - தலையில் கண்ணி என்ற மாலையை அணிந்தவள். அஞ்சு - ஐந்து. அஞ்சு மூன்று எட்டுக்கும் ஆதி- பதினாறு கலைகளுக்கும் ஆதியானவள்; இதனை சக்தி வழிபாட்டு வல்லுநர்வாய்க் கேட்டுணர்க.

இப்பாடல் 'தன்னைக்கட்டிக்கொள்ள' பாடப்பெறுவது. கட்டிக்கொள்ள - காத்துக்கொள்ளள.

## சாட்சிபதி சதாநித்தியம்

25 தங்கச் சிலம்பணி பாதாரவிந்தந் தானினைந்து
சங்கத்தில் செந்தமிழ் தான்பாடுதற்கு சாந்
நித்தியமாய்என்
அங்கத்தில் நின்று குடியாகவாழ்ந்து அருள்தருவாய்
செங்கைக் கபாலி திரிபுரை வாலை சிவசக்தியே

## மோகினி விலக

26 பகீரதி வேணி யோகினி அண்டம் படைத்த கன்னி
விகிருதி மாமந்திர ருபிகனக சத்தி மெய்ப்
பொருளாய்
திகிரி யலைவளர் காமாட்சி என்று தினம்
நினைத்தால்
லகிரி எனவருள் தருவாள் திரிபுரை நாயகியே.

---

24. சூலாயுதத்தி - சூலாயுதத்தை உடையவள் சுடர்-சூரியன் சோமகத்தி - சோம மார்க்கத்தில் வழிபடப்பெறுபவள்; தேவியை வழிபடும் மார்க்கத்தில் சோம மார்க்கம் ஒன்று; இதனை, தேவி வழிபாட்டு வல்லுனர்வாய்க் கேட்டுணர்க. மேல் ஆயுதத்தி -அனைத்துக்கும் மேலான ஆயுதத்தை உடையவள். விடம்பனத்தி -கொடியோரைத்துன்புறுத்துபவள். மேவலர் - பகைவர், எறிப்பாள் -அழிப்பாள்.

இப்பாடலும் 'தன்னைக்கட்டிக்'கொள்ளப் பாடப்பெறுவது.

25. பாதாரவிந்தம் தான் நினைந்து. சங்கத்தில்-தமிழ்ப்புலவர்கள் கூடிய அவையிலே. சாந்நித்தியமாய் - உடன் தோன்றிக் காட்சி யளித்து. அங்கத்தில் - இருதயத்தில், உள்ளத்தில். திரிபுரைமாலை பாடிய ஆசிரியர், திரிபுரையிடம் வேண்டிக் கொண்டவாறு இப் பாடலில் கூறப்பெற்றது.

இப்பாடலும் 'தன்னைக்கட்டிக்'கொள்ளப் பாடப்பெறுவது.

26. பகீரதி, வேணி, யோகினி ஆகியவை திரிபுரை குறித்த பெயர்கள். அண்டம் படைத்த கன்னியானவள். விகிருதி-இத்தன் மையவள் என்று கூறமுடியாத வேறுபாடுடைய தன்மையுடையவள். மா-சிறந்த. மந்திர ருபியானவள். கனகசத்தி - பொன்மயமான

## பிரமராக்ஷஸ் விலக

27 பாதாள லோகம் பகிரண்ட கூடம் படைத்து
அண்டம்
தாதாள வந்த தயாபரியேயித் தாரணியில்
வேதாளம் பூத ராச்சச கூளி விரூபைகளை
பாதாளம் தள்ளப் புதைப்பாள் திரிபுரை
பார்வதியே

## சத்துரு கெட

28 நீயே துணையென்று நெஞ்சகம் தன்னில்
நினைப்பவர்க்கு
மெய்யாக நின்று விடையாடும் சத்தியென்
மேவலரை
அய்யோ வென்றலறத் தட்டழித்து ஓடிடவேதலை
கொய்ய வருவாள் அகோர படத்தி திரிபுரை
வாலை சிவசக்தியே

---

சக்திவடிவினள். திகிரி அலைவளர் காமாட்சி - சக்கரம்போல் ஒளியலைகள் சூழ்ந்து வளர்ந்த காமாட்சிதேவி. லகிரி - கருணைப் பெருக்கு, கருணையாகிற பிரவாகம்; என அருள்தருவாள்.

இப்பாடல் 'மோகினிவிலக' பாடப்பெறுவது.

27. பகிரண்ட கூடம் - வெளியண்டங்களாகிற கூடங்களை. அண்டம் தாதாள - அண்டங்களை அசைவு பெறச் செய்து ஆட்சி புரிய. தாதம் - அசைவு. ராச்சசர் - ராக்ஷஸர்கள். கூளி- பேய்கள். விரூபைகளை - கோரமான வடிவம் கொண்டவைகளை.

விரூபைகளை என்பதற்கு விரூமைகளை என்பதும் ஒரு பாடம். இப்பாடல் 'பிரமராக்ஷஸ்' விலகப் பாடப் பெறுவது.

28. மேவலர் - பகைவர். அய்யோ : துயரக்குறிப்பு. தட்டழித்து - அடியோடு அழித்து. அகோரபடத்தி - கொடிய படத்தினையுடைய பாம்பினை அணிந்தவள்.

இப்பாடல் 'பகைகெட' பாடப் பெறுவது.

### ஏவலும் சகல குறிப்புகளும் விலக

29 திரிபுரை வாலை புவனை மூன்றைத் தினம்தினம்
இருதயம் தன்னில் மறவாது போற்றி ஏத்துவார்க்கு
மருவல ரேவல் விடும் பில்லிசூனியம் வஞ்சனையும்
பருதியைக் கண்ட பனிபோல் நீங்கும் பஞ்சாட்சரமே

### சகல பிணி தீர

30 உன்னைத் துதிக்கும் அடியார் தமக்கு
உலகுதன்னில்
பின்னை யிடர்வினை பேயுமுண்டோ
பிரதட்சிணமாய்
அன்னையைப் போல் வந்தடியேனைக்
காத்தாண்டருள்வாய்
புன்னை வனக் குயிலே திரிபுரை வாலை புரந்தரியே

### சகல சக்கதேவிர

31 தாயே நீ யான் உன் பாதார விந்தமே தஞ்சம்
தமியேன் தனக்கு
நீயே துணையின்றி வேறே துணை
யில்லை விமலிசத்தி

---

29. திரிபுரை, வாலை, புவனை மூன்றை - திரிபுரை, வாலை, புவனை என்ற மூன்று மந்திர மூர்த்திகளை. மருவலர் - பகைவரின். ஏவல் விடும் - மந்திர வழியே தீயது ஏற்படுமாறு ஏவி விடுகின்ற. பருதி - சூரியன். பஞ்சாட்சரமே - ஐந்தக்கரவடிவான திரிபுரையே.

இப்பாடலும் 'பகைகெட' பாடப் பெறுவது.

30. பேயும் உண்டோ - பேய் பிடித்தலும் உண்டோ, இல்லை என்றவாறு. அன்னை - பெற்றதாய். புன்னை வனக்குயிலே - புன்னைநல்லூர் என்ற வனத்தில் எழுந்தருளிய குயில் போன்ற மாரித்தாயே; புன்னைவனம் : தஞ்சைக்கு அருகில் உள்ள மாரியம்மன் கோவில். புரந்தரி - பாதுகாப்பவள்.

இப்பாடல் 'பிணியகல' பாடப் பெறுவது.

ஆயே சமய மிதுவேளை வந்தருள் தருவாய்
மாயேச் வரியே திரிபுரை என்றுனை வாழ்த்துவனே

32 நித்தம் உனைத்துதித் தேத்துவ தெல்லாம்
உன் பாதமதில்
மெத்த மலரிட்டும் யேத்துவர் தாமிந்த மேதினியில்
குத்தங்கள் கேரடி செய்தாலும் உன்
கடாட்சம் கொடுத்தருள்வாய்
சுத்த மெய்ஞ்ஞானப் பொருளே திரிபுரை
சிவசக்தியே

33 மாதே சிவந்த மதிபோல் வெளுத்து வடிவாய்
வளர்ந்த உருவே
வானோர்கள் கண்டு தொழவே மிகுந்த
வலிவான சிங்கமதனின்
மீதே யெழுந்து தரையே நடுங்க மிகுமைந்தும்
மிகு மிரவி
வியனூறு கோடி ஒளிபோல் எங்கும் மிகவே
துலங்கும் வெளியாய்

---

31. தாயே நீ - எனக்குத் தாய் நீயே. பாதாரவிந்தமே-சீர்பாதத் திற்கே. தஞ்சம் - புகலாக அடைந்தேன். ஆயே - தாயே. சமயம் இதுவேளை - இதுபோழ்தே சமயமாகக் கருணைகொண்டு. மாயேச்வரி- மகேசுவரி.

பாதாராவிந்தமே என்பதற்கு 'பாதாரமே' என்பதும் ஓர் பாடம்; பாதாரம் - கிரணம் என்றபொருளும் பொருந்தும்.

இப்பாடலும் 'பிணியகல' பாடப்பெறுதல் வேண்டும்.

32. மெத்த-மிகவும். குத்தங்கள் - குற்றங்கள்; எதுகைத் தொடை நோக்கி குத்தங்கள் எனலாயிற்று. கடாட்சம்-கடைக்கண் பார்வை.

இப்பாடலும் 'பிணியகல' பாடப்பெறுவது.

33. சிவந்த மதிபோல் வெளுத்த வடிவாய் - வெண்ணிறச் சிவப் பாகத்தோன்றும் சந்திரனைப் போன்ற வடிவமாக. வலிவான - வலிமை கொண்டதான. சிங்காகிற அதன்மீதே. எழுந்து - எழுந் தருளியிருந்து. மிகும் ஐந்தும் - மிக்க வான், நிலம், தீ, நீர், காற்று

சூதேமிகுந்த யிருளான வஞ்ச துயர் துன்பம்
அகல அருள்வாய்
துணையே எனக்குன் இருபாதம் அன்றி துணை
ஏது மில்லை யம்மா
தீதே நினைந்த மாயாவி நானுன் சீர்பாதம்
சேர அருள்வாய்
திகழ் செல்வ மோங்கும் திகிரியும் வாளும்
திரிபுரை வாலைஉமையே

---

ஆகிய ஐந்து பூதச்சேர்க்கையும். மிகும் இரவி ஒளியால் மிக்க சூரியன். வியன் - விளங்குகின்ற. இரவு நூறுகோடி ஒளி போல் துலங்கும் ஒளியாய் என்றது திரிபுரையின் தோற்றப் பொலிவை. இருள் - மாயையாகிற இருட்டு. திகிரி - சக்கரம்.

34 சத்தியும் சம்பு மாகச் சதாசிவ மயத்தைப் பாட
பத்தியும் முத்தி உண்டாம் பரமநற் பாதம் போற்றி
வெற்றிவேல் பராவு ராசன் விரும்பிய போத
கந்தான்
சத்திய மாகத் தொழவே சண்முகன் காப்புத் தானே

சிவ சுதன் கணபதித் திருவடி சரணம்

குருவே சரணம்

## வசியம்

35 பாலை வெவ்வே றுருவாகிநின் பாதம்
பணிவிடைக்கே
காலையு மாம்படிச் செய்ததுவோ என்னைக்
காத்தருள்வாய்
ஆலய மாக அடியாருளத்தில் அமர்ந் திருந்த
வாலை கௌரி மகமாயி திரிபுரை மனோன்மணியே.

## வசியம்

36 அந்தே கருங்குழல் பொரத் தோடிருங் குவளை
அம்புவிழி
யுந்தேக ரூபமும் கைமீது இலங்கு யீர்வாள்கதை

---

34. சத்தியும் சம்பும் ஆக - சக்தியும் சிவமும் ஆக. சதாசிவமயம் ; விந்துரூபமும் வியோம வடிவும் படிக நிறமும் பிறைமுடியும் ஐந்து திருமுகமும் பத்துக்கரமும், மூன்று கண்களும் உமையொரு பாகத்தில் கொண்டு சௌமியமாகத் தோற்றம் அளிப்பவரின் தன்மை. இவர்க்குரிய பீஜாக்ஷரம் ஹகாரம். பரம - பரம் பொருளே. உன் நறபாதம். வெற்றிவேல் பரவு ராசன் - வெற்றிக்குரிய வேலைப் புகழ்கின்ற ராசாஞகிய நான். போதகம் - உபதேசம். போதகத்தை பாடி தொழவே. தொழுவதற்குச் சண்முகன் காப்பு என்க.

இப்பாடலில் குறிப்பிட்ட இராசன், **வீரைக் கவிராசன்** என்பவர் எனக் கருத முடிகின்றது. சிவசுதன் - சிவபெருமானின் திருக்குமரன்.

பந்தேறு கொங்கையும் பாதச் சிலம்பும்
பணிபட்டுடையா
வந்தே எனைநித்தம் காத்தருள் வாலை
மனோன்மணியே

## திருஷ்டிவிலக

37 திட்டிக் கருவில் எதிரேற்று மாரணம்
செய்வினைகள்
இட்ட குலப்பல வாழ்வழிந் திட வேயிரங்கி
கட்டிப் பிடித்தவர் மண்டை நெரியக் கடித்துதறி
வட்டத்துள் ஆடி வருவாலை தேவி மனோன்
மணியே

## மோகனம்

38 ஓங்கார வட்டத் தொளிவெளியாய் இவள்ஓர்
ஓம் எனவே
நீங்கா திருந்த அரிமேல் எழுத்தில் நிறைந்த தமிழ்

---

35. பாலை-வாலை; பன்னிரண்டு வயதுக்குரிய பருவம்; திரிபுரையைக் குறித்தது. வெவ்வேறு பருவத்துக்குரிய வடிவம் கொண்டதாகிய காலையும் ஆம்படி - அடைப்புற்ற தொழுவம் என்னும் படியாக செய்ததுவோ; ஓ வியப்புக் குறிப்பு.

இப்பாடல் 'வசியம்' ஏற்படப் பாடுவது.

36. அந்தே: வராகித்தாயே; 'அந்தே' என்றமந்திரச்சொல் வராகி மகாகற்பத்தில் கூறப்பெறுவது. ''அந்தே அந்தினி நம;'' - திரிபுரையின், செவியில் அணிந்த தோடு கருங்குழலைப் பொர; குழல்-காதுப்புறத்துக் கூந்தல் பகுதி. இருங்குவளை - கரியநீல நிறவிழியும் முள்ள நீ லோத் பலமலரையும், அம்புவிழி-அம்பினைப் போன்ற கூர்மையும் கொண்ட விழியும் என்க. ஈர்வாள் - கொடியவர் தலையை அறுக்கும் வாளும் கதையும். பந்து ஏறு - பந்தைக் காட்டிலும் ஏற்றம் கொண்ட. பணி பட்டுடையா - பாம்பைப் பட்டாடையாகவும் கொண்டு.

இப்பாடலும் 'வசியம்' ஏற்படப்பாடுவது.

37. திட்டிக் கருவில் - திட்டிவிடம் என்னும் பாம்பைப்போல் பார்த்த அளவிலேயே எரிக்கும் பார்வைக் கருவினால். எதிர் ஏற்று

பாங்காய்க் கொடுத்து அடியார் உளத்தில் பதிந்து
தினம்
வாங்கா திருந்த திரிபுரை வாலை மனோன்மணியே.

## ஆகருஷணம்

39 நேமத் திருந்துனைப் போற்றும் அன்பரை
நீள் நிலத்தில்
ஏமத் திடர்செய்ய வேண்டிடும் லோபரை
யேதுணிந்து
சாமத்தில் போந்து உடல்தோல் உதிரத்தைத்
தான் உலர்த்தி
வாமத் துறிஞ்சும் திரிபுரை வாலை மனோன்
மணியே.

## ஸ்தம்பனம்

40 பையநின் நாளைத் துதித்தேத்தி பாடிப் பரிதவித்துச்
செய்யும் உரையேஉன் காதினில் ஏற்றுச் சித்தம்
வைத்நாய்

---

- பிறரை எதிர் கண்டு. மாரணம் - இறப்பு. செய்வினை - ஏவல் முதலியதீவினைகள். இட்ட - இடப்பெற்ற. செய்வினைகள் இட்ட தால் குலம்பல வாழ்வு அழிந்திடவே இரங்கி என்க. அவர்-செய் வினைகள் செய்த வரை. வட்டம் - திரிபுரைச்சக்கரம்

இப்பாடலும்-திருட்டிவிலக' பாடப்பெறுவது, திருஷ்டி-பார்வை தோஷம்.

38. ஓங்கார வட்டம் - பிரணவச் சக்கரம். ஓம் என்ற சக்ரத்தில் அரி என்னும் எழுத்தின்மேல் ஓம் எனவே நீங்காதிருந்த தமிழ்; இதன் நுட்பம் மந்திரம் வல்லுநர்வாய்க் கேட்டுணர்க. பாங்காய் - முறையாக. வாங்காது - மறையாமல், போகாமல்.

இப்பாடல் 'மோகனம்' செய்யப் பாடப் பெறுவது.

39. நேமத்து - நியமத்துடன். ஏமத்து - இரவில். வேண்டிடும் லோபரையே - மந்திர வழியே முயற்சி செய்யும் அற்பரை. துணித்து - இரண்டுபட வெட்டி. சாமத்தில் - இரண்டரை நாழிகைப்

துய்யச் சுழியொடு குண்டலி மின்ன சுருதி முற்ற
மய்யத்தில் ஆடிவரு வாலை திரிபுரை
மனோன்மணியே.

### பேதனம்

41 ஏதாகிலும் அன்பர் தம்மீதில் வஞ்சனை யிட்டவரை
வாதே புரிந்து பிணக்களமாக மகிழ்ந் தெரித்து
நீதேவி என்றுன்னை நானே மனத்தில் நினைக்க
வரும்
மாதே புவனை திரிபுரை வாலை மனோன்மணியே.

### மாரணம்

42 சல்லிய மூலம் அறிந்தே கருமை தானெடுத்து
சொல்லிய மயானத்தில் மாரணம் செய்திடும்
துர்ச்சனரை
பல்லை உடைத்து வாய்நாசியில் ரத்தம்
படவடிப்பாய்
வல்லி புவனை திரிபுரை வாலை மனோன்மணியே

---

பொழுதில். வாமத்து - வாம மார்க்க முறைப்படி; இடப்பக்கம் எனலுமாம்.

இப்பாடல், 'ஆகருடணம்' பற்றிப் பாடப் பெறுவது.

40 பைய - மெல்ல. பரிதவித்து - உன் கருணைக்காக இரங்கி. உரையே - என் துதிப் பாடல்களை துய்ய - தூய்மையான. சுழி- சுழுமுனைநாடி. குண்டலி மூலம் - மூலாதாரத்துக் குண்டலி சக்தி. மய்யத்தில் - இருதயாகாசத்தில். ஆடி - தோன்றி. வாலை - பாலை என்ற திரிபுரை.

இப்பாடலும் 'ஆகருடணம்' பற்றிப் பாடப் பெறுவது.

41. அன்பர் - திரிபுரையின் தொண்டர்கள். வாதே புரிந்து - திரிபுரை, தன் சக்தியால் வஞ்சனையாளரின் மதியை மயக்கி. புவனை, திரிபுரை வாலை ஆகிற மனோன்மணியே.

இப்பாடல், 'பேதனம்' குறித்துப் பாடப் பெறுவது.

42. சல்லிய மூலம் - மந்திரவாதத்திற்குரிய மாயவித்தைகளின் அடிப்படைக் கூறுகளை. கருமை - தீமைதரும் கருவாகிற மையை.

## வித்துவேஷணம்

43 முளையத்தில் வட்டம் இதழ்பன் னிரண்டு
முக்கோணம் ஐந்தாம்
களையற்ற தட்சரம் அரிமேல் எழுத்தொடு
சுழலும் மாயத்
தளையற்ற அட்சரம் பூசித்து நேமிக்க
தண்தமிழ்த்தாள்
வளையத்தில் ஆடும் திரிபுரை வாலை
மனோன்மணியே.

## வியாதி பார்வைத் தோஷம் விலக

44 சவ்வும் கிலியும் ஐயும் ஓமென்று எழுத்தைத்
தானறிந்து
செவ்வி யிருந்துனைப் பூசிக்கும் அன்பர்க்குத்
திருவுளத்தில்
ஒவ்வும் படிக்கு நடமாடிவந்து மொழி கொடுப்பாய்
மவ்வும் வவ்வும் ஒவ்வும் திரிபுரை வாலை
மனோன்மணியே.

---

சொல்லிய-சல்லிய வித்தை நூல் கூறியவாறு. மயானம் சுடுகாடு. மாரணம் - பிறரை இறப்புறச் செய்யும் மந்திரமுறை. வாய் நாசியில் ரத்தம் வர; ரத்தம்பட. வல்லி - வல்லிக் கொடி போன்ற புலனை.

இப்பாடல் 'மாரணம்' குறித்துப் பாடப் பெறுவது.

43. முளையத்தில் - அங்குரத்தில். முளையாணி, முளை என்பது பொருள்; வேரில் எனலும் ஆம். வட்டம் - வட்டமான கோடு. இதழ் பன்னிரண்டு - வட்டத்தைச் சுற்றிலும் பன்னிரண்டு மலர் இதழ்களை வரைந்து. முக்கோணம்-மும்முனைக்கோடுள்ள சக்கரம். களையற்ற தட்சரம்-சோகமற்றதாகிய எழுத்துக்களைப் பொருத்தி. அரிமேல் - ஹரி என்ற எழுத்தின்மேல். சுழன்றிடும் மாயத்தளை யற்ற அட்சரம் - மாயையின் பந்தந்தால் சுழலுதலை நீக்கும் ஓம் என்ற மந்திரப் பிரணவ எழுத்தை வரைந்து. ஓம் என்ற எழுத்து சுழன்றிடும் மாயத்தளையை நீக்குவது குறிப்பதாகும். ஓம் என்பதில்

### பசு பால் சுரக்க

45 தத்துவ பீடம் அயன்மால் அரன் தாங்கியதால்
வித்தகப் பெண் அணங்கே கோடி வேதாந்த
சத்திநீ வீற்றிருந் தாய் அத்தி முகன்றன்னை
பெத்தமயேசுவரி மாதங்கி இராசன்முன் வருவாலை
மனோன்மணியே

### ககனம்செல்ல

46 நாசி வழிவரும் வாசியை மூட்டி நடுவணையில்
பாசம் அறவும் இருவினை தீர்த்து முப்பாழ்கடந்து
பேசா திருந்துன் திருப்பாதம் பணிய அருள்வாய்
..............சிவகாமி திரிபுரை வாலை
மனோன்மணியே.

---

ஓகாரத்தின் வளைவு மாயக்சுழலைச் குறிகாட்டுவதாகும். நேமிக்க - நியமமாக வழிபட. தண்தமிழ்த்தாள் - என் துதிப்பாடலாகிற (திரிபுரைத்துதி) தமிழை ஏற்றுக்கொண்ட பாதங்களில். வளையத்தில் - சிலம்பணியில். ஆடும் - ஒலியை எழுப்பும்.

இப்பாடல் 'வித்துவேஷணத்துக்கு' பாடப்பெறுவதாகும். இப்பாடலில் கண்ட திரிபுரைச் சக்கரமுறையை மந்திரம் வல்லுனர் பால் கேட்டறிக. 'களையற்ற' என்பதற்கு 'அளையத்த' என்றும் ஒருபாடம்.

44. சவ்வும், கிலியும், ஐயும் ஓம் என்ற எழுத்துக்களை. செவ்வியிருந்து - உன்கருணைக்குரிய சமயம் எதிர்பார்த்திருந்து. ஒவ்வும் படிக்கு-வழிபடும் பக்தர்களின் உள்ளம் நிறைவுறும் வண்ணம். நடமாடி-நர்த்தனம் ஆடி. மொழி-அருள் வார்த்தைகளை. கொடுப்பாய் - அசரீரியாகத்தருவாய். மவ், வவ், ஒவ் என்ற அட்சரரூபமான திரிபுரை.

இப்பாடல் 'வியாதி பார்வை தோஷம் அகல' பாடப்பெறுவது.

45. தத்துவபீடம் - தத்துவத் திரயமான உண்மைப் பொருளான உன் பீடத்தை; பீடம் - இருக்கை. அயன் மால் அரன்-பிரமன் திருமால், சிவன் மூவரும். தாங்கியதால் - தாங்கிக் கொண்டிருப்பதால். வித்தகம் - மெய்ஞ்ஞானம். தத்துவபீடத்தை மூவர்தாங்க வீற்றிருந்தாய். அத்திமுகன் - யானை முகத்தையுடைய விநாயகன்

## தலைவலி நீங்க

47 நூலை அறிந்து அறிவால் ஓம் என்று மேனோக்கி
மனம்
காலை அறிந்து பரஞ்சோதி பாதத்தைக் கண்டுதொழ
மாலையும் காலையும் வந்து துதிசெய வாழ்
வருள்வாய்
வாலை புவனை திரிபுரை மாலை மனோன்மணியே.

## கண் நோய் அகல

48 கங்கைச் சடைச்சி அன்னப்போல் நடைச்சி
கதிரொளிச்சி
சிங்க இடைச்சி பருத்த முலைச்சி செந்தாமரையாள்
சங்கைச் சுமத்தியென் ஆண்மக்களைப்பெற்ற
சங்கமத்தி
மங்கை பெண்ணணங்கே திரிபுரை
வாலை மனோன்மணியே.

---

பெத்த - பெற்ற: எதுகைத் தொடைநோக்கி பெத்த என்றாயிற்று மயேசுவரி - மகேசுவரி. மாதங்கி - துர்க்கை. மதங்க முனிவருக்குப் புதல்வியாக அவதரித்தவள். 'மாதங்ககன்யாம்' என்பது சியாமளா தண்டகம். இராசன் முன் - கவிராசனாகிய என்முன். வருவாலை - காட்சிதருகின்ற பாலையே.

இப்பாடல், 'பால்சுரக்கப்' பாடப் பெறுவது.

46. நாசி - மூக்கு. வாசி - காற்று; மூச்சுக் காற்று, நடுவணையில் மூட்டி - யோகமுறையால் ரேசகம் பூரகம் கும்பகம் செய்து சுழு முனையில் எழுப்பி. நடுவணையில் - சுழுமுனை நாடியில், பாசம் அற - பற்றுக் கயிறு கெட. இருவினை - நல்வினை, தீவினை. முப்பாழ் - உடம்புக்குள் சூன்யமான மூன்றிடங்களை; பேசாதிருந்து - வாய் பேசாது மௌனமாக இருந்து.

இப்பாடலில் நான்காம் வரியில் முற்பகுதி ஏட்டில் விடுபட்டிருக்கிறது.

இப்பாடல் 'ககனச்செலவுக்கு' பாடப் பெறுவது. பேசாதிருந்து என்பதற்கு, 'பேசாதெழுந்து' என்றும் ஒரு பாடம்.

### விஷம் நீங்க

49 ஐயத்தை நீக்கி அறிவா றுணர்ந்து அருள்புரிந்து
மெய்யுற்ற நாசி செவிவாய் விழி தாமறிந்து
பையுற்ற பாம்பை யணிந்தாட்டி அங்கம் பதிந்து சுழி
மையத்தி லாடும் திரிபுரை வாலை மனோன்மணியே.

### எதிரி பார்வை அகல

50 சாயக் கருவெடுத் தேமெழு கொடு தான்பிடித்து
போயச் சுடலைக் கிருந்தேவல் செய்யும் புலையர்களை
நாய்நரி பேய்கள் உண்ண வடித்து நற்பலி செய்
மாயற் கிளைய திரிபுரை வாலை மனோன்மணியே.

---

47. நூலை - மந்திர சாஸ்திர நூலை; யோக நூலை, சக்தி வழி பாட்டுக்குரிய நூலை எனக் கொள்க. அறிவால் - மௌன நெறி கொண்ட ஏகாக்ர சித்தத்தால். ஓம் என்று - ஓம் என்ற பிரணவ மந்திரத்தை உள்ளால் கூறி. மேல் நோக்கி-சுழுமுனையில் பார்த்து. மனத்தையும் காலையும் அறிந்து. கால் - பிராணவாயு. பரஞ்சோதி - திரிபுரையின் ஒளிவடிவத்தின். வாலை, புவனை, திரிபுரை மாலையை துதி செய வாழ்வருள்வாய் என்க.

இப்பாடல் 'தலைநோய் தீர' பாடப் பெறுவது.

48. கங்கைச் சடைச்சி-கங்கையைத் தலைச்சடையில் தாங்குபவள் நடைச்சி - நடைபையுடையவள். ஒளிச்சி - ஒளியையுடையவள். சிங்கஇடைச்சி - சிங்கத்தின் இடைபோல், இடையை உடையவள். தாமரையாள் - கையில் தாமரையையுடையவள். சங்கைச் சுமத்தி - வலம்புரிச் சங்கைக் கையில் சுமந்தவள். சங்கமத்தி - சிவசக்தி வடிவானவள். சிவசக்தியாக இருந்து என் ஆண்மக்களைப் பெற்றவள்; திரிபுரையின் மக்கள் என்மக்கள் என்றவாறு.

இப்பாடல் 'கண்வலி தீர' பாடப்பெறுவது.

49. ஐயம் - உண்மைநிலை அறிவதில் சந்தேகத்தை. மெய்உற்ற - உடம்பில் பொருந்திய. நாசி-மூக்கு. செவி - காது; மெய், வாய்,

## காற்றுத் தோஷம் விலக

51 அரவே யணிந்து குண்டலிமீது அமர்ந்த மெய்யே
தரவேணு மென்று நிச்சம்துதித்து முற்றும் நின்
தாள்நிறுத்தி
துரவேறி மூவகை உள்மனை காட்டி துதிக்க நிதம்
வரவேணும் என்முன் திரிபுரை வாலை
மனோன்மணியே.

## சுளுக்கு விலக

52 தாக்குடன் அட்சரம் அங்குசமுந்தனைத் தானறிந்து
வாக்கு ஐங்காயம் கருவது கூட்டிப் பசாசுகளை
நோக்கி உருச்செபித்து அட்சரம் ஓடியத்
தூர்த்தர்களை
வாக்குடன் நெஞ்சைப் பிளந்தாடும் வாலை
மனோன்மணியே

---

கண், மூக்கு, செவி என்ற ஐந்து இந்திரியங்களைத்தாமே அறிந்து-பை உற்ற - படம் கொண்ட. பாம்பை - உடலின் நடுவாக உள்ள ஆதிசேஷனை. சூட்டி - நிலைநிறுத்தி, அங்கம்பதிந்து - உடலுறுப்புக்களைப் பொருந்த செய்து. சுழிமையத்தில் ஆடும் - சுழுமுனை நடுவில் ஒளிவீசிக் காட்சியளிப்பாள்திரிபுரை. இப்பாடல் யோக மார்க்க நெறிகூறுவது ''எட்டு நாகம் இருக்கின்ற இடத்தில்'' என்றும், ''நடுவாக ஆதிகேசன்றன்னை நாட்டு, நான்கு திக்கும் மந்திரித்த நீறு தூவு'' என்றும் பாம்பாட்டிச் சித்தர் கூறுகிறார். இதன் நுட்பம் குருமுகமாக வல்லார்வாய்க் கேட்டுணர்க.

இப்பாடல் 'விஷம்தீர' பாடப்பெறுவது.

50. சாய - இறப்புக்குப்பின், கரு-கருமானம்; மெழுகு-கருமானத்துக்குரிய மெழுகு. போய் - சென்று. சுடலைக்கு - சுடுகாட்டில். ஏவல் - பிறர்மீது தீயபிரயோகம். புலையர் - கீழானவர்கள். பலி செய்-பலியூட்டுகின்ற; திரிபுரை என்க. மாயற்கு இளைய-திருமாலின் சகோதரி, துர்க்கை என்பது மரபு.

இப்பாடல் 'எதிராளி பார்வை தோஷம் தீரப் பாடுவது.

51. அரவே அணிந்து - பாம்பை அணியாகப் பூண்டு. குண்டலீ மீது - குண்டலி சக்கரத்தின் மேல். மெய்யே - தத்துவப் பொருளே.

## பைசாச தோஷம் போக

53 ஆக்கிப் படைத்து யேரிநீரமது அண்டமாதி முதல்
போக்கிய சாவல் பலிகொடுத்து ஏவல் புரிந்தவரை
நாக்குக் குளற விழிதான் பிதுங்கநன் றாயடித்து
வாக்குக்குள் நாடி வரும்வாலை தேவி
மனோன்மணியே.

## உடல் கட்டு

54 தடமாறிக் காத்த கருவெடுத் தேவல் மைதான்
முகிழ்த்து
புடமான கோட்டின் இருந்தேவல் செய்வர்முன்
போய்ப் புகுந்து
கடமா றதுபோல மிதித்தேறி மிக்குக் கசக்கி வரும்
மடமாது தேவி திரிபுரை வாலை மனோன்மணியே.

---

தரவேணும் என்று-எனக்கு நன்னிலை தரவேண்டுமென்று. நிச்சம் - நாள்தோறும், எப்போதும். தாள் நிறுத்தி - உன் பாதங்களை என்னுள்ளத்தே நிலைபெறச்செய்து. துரவு ஏறி - மூலாதாரக் கிணற்றிலிருந்து மேல் அடைந்து. மூவகை உள்மனை - இடகலை. பிங்களை, சுழிமுனை ஆகிய மூன்று வகையான உள்நிலை இடம் துதிக்க - உன்னைத்துதிசெய்ய. நிதம் - நாள் தோறும்.

இப்பாடல் 'காற்று தோஷம் நீங்க' பாடப்பெறுவது.

52. தாக்குடன் - அதிர்ச்சியுடன், வேகத்தோடு; அட்சரம்-பைசாச சக்கரத்துக்குரிய எழுத்துக்களையும். அங்குசம்-சக்கரத்தில் வரையும் அங்குசக் குறிகளையும் வாக்கு - திரும்பின பார்வை; ஐங்காயம். உள்ளி, கடுகு, சுக்கு, பெருங்காயம், மிளகு என்பன. கருவது - தலைப்பிள்ளைக் கருவினையும். உருஎண்ணிக்கை - அட்சரம் உரு செபித்த தூர்த்தர்களை ஓடி என்க. வாக்குடன் - உருசெபித்த வாயுடன்.

இப்பாடல் 'சுளுக்குதீர' பாடப்பெறுவது.

53. ஆக்கி - பலியுணவுகளைச்செய்து. ஏரி - குட்டேறு. நீரம் - நீர் மது - கள். அண்டம் - முட்டை. முதல் முதலான. போக்கிய-செய்து போக்கி என்பது போக்கிய எனப்பட்டது. சாவல் பலி-கோழியைப் பலி கொடுத்தல். வாக்குக்குள்-என் துதிப் பாடல் புரியும் வாக்கினில்

இப்பாடல் 'பைசாசம் பிடித்தவர்க்கு தோஷம் நீங்க' பாடுவது.

## சிறு விஷம் தீர

55 பூத்த் துரை எங்கள் பொன்னம்பலத் தாளைப்
பூரணத்துள்
நீத்திருந்து இடை பிங்கலை சுழி நேர்மையேட்டில்
பாதச் சிலம்பொலி கொண்டாடி நின்ற
பராபரத்தில்
வாதத் துரைச்சி திரிபுரை வாலை மனோன்மணியே.

## பல் கடிக்கும் தோஷம் விலக

56. துடிவாளும் மாடன் வயிரவன் காளிசொல்வீரன்முத
லொடுசே வித்து ஏவல்செய்வோர் அண்டாமல்
முனிந்துமெள்ள
அடிவாள் முடிகண்டிரு பிளவாகப் பிளந் தங்கமணி
வடிவாய்த் திரிபுரை வரும் வாலை தேவி
மனோன்மணியே.

---

54. தடம் மாறி - ஓமகுண்டத்தில் முறைப்படி நின்று. காத்த - காவல்கொண்ட. கரு - கருமானமை. ஏவல் மைதான் முகிழ்த்து - தீவினை புரிய ஏவுதலைச் செய்யும் மையைப் பிரித்து வைத்துக் கொண்டு. புடமான கோட்டின் இருந்து - சுடுகாட்டுக்கரையின் மேல் இருந்து. கடம் ஆறதுபோல - யானைக்கூட்டம் ஆற்றில் கலக்குவது போல.

இப்பாடல், 'தன் உடல் கட்டு'க்காகப் பாடப் பெறுவது.

55. பூத்தது உரை - அண்டமெல்லாம் உண்டாக்கியவாறு சொல்லும். பொன்னம்பலத்தாளை - மகாசக்தியை. பூரணத்துள் - சிதாகாசத்தில். தீத்திருந்து - தனித்திருந்து. நேர்மை எட்டில்-நேராகச் செல்லும் திரிபுடையில், வாதத்து உரைச்சி-வாதங்களின் முடிவான கட்டளைக் கல்லரனவள்.

இப்பாடல் 'சிறுவிஷம் நீங்கப்' பாடப்பெறுவது.

56. துடி வாளும் - உடுக்கையும் வாளும் கொண்ட. முதலொடு - முதலான தெய்வங்களோடு. அண்டாமல் - தம்மை அணுகாமல் வாளின் அடியால் முடியைக் கண்டு இரு பிளவாகப் பிளந்து.

## அக்கினி கோபம் விலக

57 தேவாதி தேவன் ரிஷிமாலயன்றன் தேடித் தினம் துதிக்க
மூவாதி யாகி அரிமேல் ஒளியெனும் அஞ்சையுமாய்
பாவா .........மெய்க்கவும் மெஞ்ஞான போதப் பருவமதாய்
வாவா புவனை திருபுரை வாலை மனோன்மணியே.

58 சதுமா மறைக்கு அகிலாண்ட நாயகி உன்துணைத் தாள்துதித்தால்
எதுதான் நினைக்கில் அதுதான் கொடுத்து அருள் புரிவாய்
மதுமாலை யியைந்து எனையாண்டு கொள்ள பரமுனக்கு
மதுமாங் சிசத்தி திரிபுரை வாலை மனோன்மணியே.

## மகப்பேறு உண்டாக

59 நிரந்தர மாகி அரிஓம் அரங்கன் நீதி யொடும்
தரந்தர மாகியும் மந்திரந் தானடித் தனிப் பொருளாய்

---

அங்கம் அணிவடிவாய் - தீயவர்களின் அங்கங்களை மலையாக அணிந்த வடிவுடன்.

இப்பாடல் 'பல் கடிகின்ற தோஷம் நீங்கப்' பாடப்பெறுவது.

57. மூவாதியாகிய - பிரமன் திருமால் சிவன் ஆகியோர்க்கும் ஆதியாகி; என்றது திரிபுரை. அஞ்சையுமாய் - பஞ்சாட்சரமாகி; சக்தி பஞ்சாட்சரம். (மூன்றாம்வரி இடையே, சுவடியில் வரிகள் விடுபட்டுள்ளது) போதப் பருவம் - ஞானமே பருவமாக.

இப்பாடல் அக்கினிவிலகப் பாடப்பெறுவது.

58. சதுமா மறைக்கு - நான்கு சிறந்த வேதங்களுக்கு. ருக்கு, யஜுஸ், சாமம், அதர்வணம் ஆகிய நான்கு வேதங்கள். துணை - இரண்டான. மதுமாலி இயைந்து - காளியே என்க்குப் பொருந்தி. மதுமாலி - காளி.

கரந்து ஆவின் பாலின்கண் ணேயீன்று
கருத்துள் இத்தினம்
வரம்தர வேணும் திரிபுரை வாலை
மனோன்மணியே.

## கருப்பம் தரிக்க

60 நானா கலைதெரிந் துணைநம்பி எந்நாளும்
துதிசெய்யும்
சேனா பதிக் கருளே கொடுத்தாடி இம்பர்
மோனாதி யான பராபர மூர்த்தி முழுமுதலே
வானாதி போற்றும் திரிபுரை வாலை
மனோன்மணியே.

## பகைவர் துன்பம் அடைய

61 ஏதேது உனது அடியார்கட் கிடர்நினைத்
திடற்குமுன்னர்
வாதே புரிந்து பிணக்கள மாக மகிழ்தெரிந்து

---

மது பாலியைந்து என்றும் ஒரு பாடம். மதுமாங்கிசத்தி - மதுவையும் மாமிசத்தையும் நிவேதனமாக உடையவள்.

இப்பாடலும் 'அக்கினி விலகப்' பாடப்பெறுவது.

59. நிரந்தரம் - எப்போதும், தரம் தரமாகியும் - தக்க தக்க நிலையில். அடித்தனிப்பொருளாய் - அடிப்படையான தனியொரு பொருளாக. கரந்த ஆவின்பாலின் கண்ணே. இப்பாடற்குத் தத்துவப் பொருள் வல்லார் வாய்க்கேட்டுணர்க.

இப்பாடல் 'பிள்ளைப் பேறுபெற' பாடப்பெறுவது.

60. நானாகலை-பலகலைகள். சேனாபதிக்கு - முருகக்கடவுளுக்கு இம்பர் - இவ்வுலகில். மோனாதியான-மௌன நிலைக்கு முதலான.

இப்பாடலும் 'பிள்ளைப் பேறு' பெறப் பாடப்பெறுவது.

61. ஏது ஏது - எது எது, உன்னடியார்கட்கு எதுஎது இடர் நினைந்திடற்கு முன்; பகைவரால் இடர் நினைந்திடற்குமுன். வாதே புரிந்து - உன் அருளால் பகைவர் உள்ளம் சிதறவாது செய்து.

நீ தேவி என்றுன்னை நானே மனத்தில் நினைக்க வரும்
மாதே புவனை திரிபுரை வாலை மனோன்மணியே

62 அஞ்செட்டில் மூன்றில் அருளாகி சூட்சுமத் தமர்ந்தவளை
நெஞ்சிட்டுப் போற்றி வாய்நாசிமூடி நினைந்து உன்னைத்
தஞ்சமென் றோதிட மேலைச் சிதம்பரம் தான் அருள்வாய்
வஞ்சி பராபரை ஆனந்த வல்லி திரிபுரை மனோன்மணியே.

## வீடு பெற

63 பூசித்து நித்தம்உன் திருப்பாதம் போற்றி புகழ்ந்து தேவர்மேல்
ஏசி யிகழ்ந்த முழுலோபர் தங்களை யேபிடித்து
பாசத்தி னாற்கட்டி சூலத்தி னாற்குத்தி பதைக்கச் செய்வாள்
வாசிக்க முத்தி தருவாலை தேவி திரிபுரை மனோன்மணியே.

---

62. அஞ்சு - ஐந்தக்கரங்களிலும். எட்டில் - எட்டு அக்கரங்களிலும் மூன்றில் - மூன்று அக்கரங்களிலும், அஞ்செட்டுமூன்றில்: நாற்பத்து மூன்று கோணங்கள் அமைந்த மந்திரச்சக்கரத்தில் என்பதுபொருள் சூட்சுமத்து - சூஷ்மரூபமாக. நெஞ்சிட்டு - இதயத்தில் வைத்து மேலைச்சிதம்பரம் - முக்தி நிலையிடம்.

இப்பாடல் 'வீடுபேறு பெற'ப் பாடப்பெறுவது.

63. புகழ்ந்து - புகழ்ந்தால். வாசிக்க - இத்திரிபுரை மாலையைப் படிக்க.

இப்பாடல் 'வீடுபேறு பெறப் பாடப்பெறுவது.

64. உன் - திரிபுரையாகிய உன்னுடைய. சந்நதி - திரிபுரை வீற்றிருக்கும் கோயில்வாயில்.

64 உன் சந்நதி யாகத் தியானித்துத் கொண்டேன்
என்வாக்கு சரசுவதி யாகத் தியானித்து கொண்டேன்
என்னைக் கண்ட ஐயன் வணங்க அரசன்வணங்க
என்னைக் கண்ட சிரீபுருஷர் யாவரும் வணங்கி
நிற்க; சுவாகா.
சகலபூதப் பிரேத பிசாசரும் வணங்கி நிற்க சுவாகா.
திரிபுரை மனோன்மணி மாலை முற்றும்.

---

இப்பாடல், திரிபுரைமாலைக்குப் பயன் கூறும் பாடல். 'சுவாகா' என்று முடித்திருப்பது காண்க. மற்றும் இம்மாலையை, தூய்மை யுடன் பாடி, இறுதிப்பாடலையும் ஒருமனத்துடன் கூறி வழிபட்டால் பயன்கிட்டும் என்பது ஆசிரியர் கவிராசரின் அருள்வாக்கு. இம் மாலை மந்திரமொழி நிறைந்தது.

# பழனி மாலை

ஆனைமா முகனை ஆகுவா கனனை
ஞானமாய் நிதமும் நாடொறும் தொழுவாம்.

1 மிடியார்க் கமுதளிப்பாய் தேவர்கோன் சிறை
மீட்டதன்றி
படியார்க்கும் ஈயும் பராசக்தி பாலன் பழனிகிரியிற்
குடியாக்கும் எங்கள் குலதெய்வமாக்கும்முன்
கூறு முண்மைப்
படி யாக்கிய பெருமாள்நம் பழனிக் கதிபதியே.

2 வகைகட் டழகும் வடிவேலுடன் நீ அவள் வாசலிலே
புகஎட்டும் நாளுன்னை நான் அறியேன்
பொய்யே னுரைத்தாய்
வாகிட்ட போர்வை தனில் வீசுகின்ற
மஞ்சள் வாடை
மோகிட்டு நின்ற உமைபாலா பழனிக் கதிபதியே.

---

பழனிமாலை : பழனிமலையில் குடிகொண்ட முருகன்மீது பாமாலை. ஆனை - யானை. ஆகு வாகனனை - பெருச்சாளியை வாகனமாக உடைய,விநாயகனை. நிதமும் நாள்தொறும்-இரண்டும் ஒரு பொருள் குறித்தன.

1. மிடியார்க்கும் - வறுமையுற்றோருக்கும். தேவர் கோன் சிறை மீட்டதன்றி - அசுரரால் சிறைப்பட்ட தேவேந்திரனைச் சிறையி லிருந்து மீட்டுத்தந்ததல்லாமல். ஆர்க்கும் படி ஈயும் - யாவருக்கும் உணவு முதலிய ஊதியம் அளிக்கின்ற. ஈயும் பராசக்தி - உமை யம்மையின். பாலன்-புதல்வனான இளமையுடையோன். கிரி-மலை அக்குடியாக்கும் - பழனி மலையில் நிரந்தரமாக வாழ்வு கொண்ட அந்தக்குடிமக்களாகச் செய்யும். முன்கூறும் உண்மைப்படி-முன்னர் எமக்கு வாக்குறுதி கூறிய உண்மைத் தன்மைக்குத் தக்கவாறு. படி - தன்மை; இயல்பு. பெருமாள்; முருகனைப் பெருமாள் என்பது மரபு.

2. வகை கட்டழகும் - கூறுபாடுமிக்க ஒன்று திரண்ட அழகு. அழகும் வேலும் கொண்ட நீ : முருகன்: அவள் - பரத்தையின். புக எட்டும் நாள் - புகுவதற்கு அடைகின்ற நாளில். உன்னை - (முருகனை). என்னிடம் ஏன் பொய்யுரைத்தாய் என்றது தலைவி;

3 கொடிக்கொடி மின்னிடை வள்ளிபங்கா நின்
குணத்தை யெல்லாம்
படிப்படி கேட்டது மல்லா தெனைப்பெற்ற
மாதகியார்
பொடிப்பொடி............அணியருள் வேண்டியபோது
துடுக்காய்
அடிக்கடி தான்வர லாமோ பழனிக் கதிபதியே.

4 நான் நாலுமூன்று பிழைபொறுத் தேன் உன்னை
தான் அவள்பால் போனாலும் முந்தித்
தொடாதுஎன் பொய்யுரைத்தாய்
மானாம் குறவள்ளி பங்கா தெய்வானை
மனோகரனே
ஆனாலும் வம்பு செய்தீர்காண் பழனிக் கதிபதியே.

---

பழனிமுருகனிடம் காதல் கொண்ட தலைவி, முருகன் பரத்தை வீடு சென்றதைக்கூறி குறைகூறினாள். பொய் நான்பரத்தையிடம் போகவில்லை என்று தலைவியிடம் முருகன் கூறியது பொய். வாகு - முருகனின் தோளில். இட்ட - அணிந்த. மஞ்சள் வாடை-பரத்தையுடன் சேர்ந்ததால் ஏற்பட்ட வாசனை; மஞ்சளின் மணம். மோகுஇட்டு - மோகத்தைத் தந்து.

இப்பாடல் தலைவி,பரத்தையரிடம் சென்றுவந்த தலைவனான முருகனை நோக்கிக் குறைகூறியது கோவை மரபில் உள்ளது போன்று இம்மாலையும் அகத்துறை அமைதியுடன் அமைந்துள்ளது.

3. கொடிக் கொடி மின்இடை - மின்னல் கொடிபோன்ற ஒளி உடைய இடை. கொடிக் கொடி என்றது இருசொல் அடுக்கு. படிப்படி - அடுத்து அடுத்து. மாதகியார் - தலைவியின் தாய்; பாதகி என்றது, தாயின் கடுஞ்சொல் கேட்ட சினத்தால் கூறியது.

மூன்றாம் வரியில் 'பொடிப் பொடி' என்பதற்குப் பின் அணியருள் என்பதற்கு முன் சொற்கள் விடுபட்டுள்ளன; தலைவி தன் வீடுதேடி, முருகன் அடிக்கடி வருவது குறித்து ஏசியது. துடுக்காய்-குறும்புத் தன்மையுடன்.

4. உன்னை நாலு மூன்று பிழை பொறுத்தேன் நான்; என்க; இது தலைவி கூற்று. அவள்பால் - பரத்தையிடத்து. மான்ஆம் -

5 நீச்சாச்சுன் னாசை நிலையாச்சு உனக்கவள்
மூச்சாச்சு அதன்றியும் பிரீதியும் ஆச்சு இவ்வுலகில்
ஏச்சாச்சு நீமுகம் பார்த்திருக்கில் எனக்கு நிந்தை
ஆச்சாச்சு உனை நம்பலாமோ பழனிக்கு அதிபதியே

6 வந்தொப்பின படியே நடவீர்...... உம்
மார்க்க மெல்லாம்
சந்தைப் பரத்தையர்க் கேற்கும் இது
இங்கு (கள் அவிர்)
கந்தக் குழலிதன் பாலா அரனிரு
கண்மணியே
அந்தப் பகட்டை விடீர் அய்யா பழனிக்கு
அதிபதியே

7 கூகூ வெனக்குயில் கூப்பிடத் திங்களும்
குளிர்ந்து சுடப்
போகாது காப்படைத் தேயிருந் தேன்புரம்
மூன்றெரித்த

---

மான் போன்றவளாகிய; வள்ளியை மான் மகள் என்பதும் பொருந்தும். குறவள்ளி - குறவர் இனத்தைச் சேர்ந்த வள்ளி. வள்ளியைப் பங்கில் உடையவனே. வம்பு - வழக்கு.

5. நீச்சு ஆச்சு - ஆற்றில் நீந்துவதைப் போல் ஆச்சு. உன் ஆசை. உன்மீது எனக்குள்ள ஆசை. உனக்கு அவள் நிலையாச்சு, மூச்சாச்சு என்க. அவள் - பரத்தை. பரத்தையிடம் உனக்குப் பிரீதியும் ஆச்சு. இவ்வுலகில் எனக்கு ஏச்சு ஆச்சு. என்க. ஏச்சு- பழிப்பு. முகம் - என்முகத்தை. பார்த்திருக்கின் - பார்த்துக் கொண்டிருப்பதனால். நிந்தை - பழி. ஆச்சு ஆச்சு, - ஆனது ஆச்சு என்பது இரட்டித்தது. நீச்சு, ஆச்சு, மூச்சு, ஏச்சு என்பன தொடைநயம்.

6. ஒப்பினபடியே - சம்மதித்தவாறே. சந்தை - பலர்கூடும் இடம், கடைத்தெரு. கள்அவிர் - தேன் பொருந்திய. கந்தக் குழலி - மணமுள்ள மலர் சூடிய கூந்தலையுடைய பார்வதி. அரன் இரு கண்மணியே - சிவபெருமானுடைய இருகண்களின் மணியே.

பாகர் அமரர் பணியும் பதாம்புய,
பாரதனில்
ஆகாது மோகம் கடத்திடல் பழனிக்கு
அதிபதியே

8 தடுத்தாலும் அத்த வெகுமாத ருள்ளவனாம்
உனைத்தேடி
விடுத் தாசை கொண்ட தெனையே வெறுப்பது
சொல்லிவந்த
கெடுத்தானும் தப்பிப் பழிகாரி வார்த்தையைக்
கேட்கிலுனக்கு
அடுத்தால் எனக்குப் பொறுக்காது பழனிக்கு
அதிபதியே

9 பொய்யோ வன்னாள் அத்தலை தொட்டாணை
யிட்டதுவும்
பொய் விட்டுதோ மெய்யோ பரத்தையர்தான்
சதமோ இந்த வேள்

---

பகட்டு - இறுமாப்பு; வெளிவேடம். விடீர் - என்னிடம் காட்டாது விடுக.

7. கூ கூ என - கூ கூ என்று; கூ கூ என்பது குயிலின் ஓசைக்குக் கூறுவது. திங்கள் - முழுநிலவு. நிலவு குளிர்ந்த நிலை, காதலர்க்கு வெம்மையை உண்டாக்கும், என்பதால், 'குளிர்ந்து சுட' எனப் பட்டது. போகாது - முருகனைக் காண வெளியே போகமுடியாமல். காப்பு அடைத்தே - பெற்றோர்களின் காவலில் அடைபட்டு. புரம்மூன்று - திரிபுரம். பாகர் - சிவபெருமான். பாகரும் அமரரும் பணியும். பதாம்புய - தாமரைமலர் போன்ற பாதங்களையுடைய முருகனே. முருகன் சிவகுரு என்பது வழக்கு. பாரதனில் மோகம் கடத்திடல் ஆகாது என்க. தலைவி பழனி முருகனிடம் காதல் கொண்ட நிலையில், பெற்றோர் காப்படைத்து விடவே, காப்புண்டு மோகம் கடந்திடல் ஆகாது என்செய்வேன் என்று பழனிப்பதியை நோக்கிக் கூறுகின்றாள்.

8. தடுத்தாலும் - என்னை வெளியே வரவொட்டாமல் தடை செய்தாலும். அத்த - தலைவனே. தடுத்தாலும் உன்னைத்தேடி

கையோ முழுதும் மலர்வாளி பெய்யக் கருகி
நொந்தேன்
ஐயோ இனி தாங்காது என்னுயிர் பழனிக்
கதிபதியே.

10 கரும்பாச்சு வேந்தன் கணைக்கு இலக்காச்சு
கருத்தலைவாய்
துரும்பாச்சு நெஞ்சு நகையாச்சு எனக்குத்
துணைமனதும்
இரும்பாச்சு அன்ன மிடுமய மாச்சு
இரு கொங்கைளும்
பொருப்பாச்சு................. பழனிக்கு
அதிபதியே.

11 போமோ யினியழுதால் அந்த நாள்முதல்
போட்டி செய்தீர்

---

என்க. வெகுமாதர் உள்ளவனாம் உன்னை என்க. ஆசைகொண்டது விடுத்து. எனையே - எனக்கு. வெறுப்பது - பின்னர் வருகிறேன் என்ற வெறுப்பான வார்த்தைகளை. கெடு - காலக்கெடு. தப்பி - கடந்து. பழிகாரி - பரத்தையின். அடுத்தால் - நேர்மை என்று பொருந்தினால். பொறுக்காது - உன்செயலைப் பார்த்திருக்க என்னால் முடியாது.

9. அன்னாள் தலை - பரத்தையின் தலையை. ஆணை-உன்னைப் பிரியேன் என்றுகூறிய சூளுறவு. அன்னாள் தலைதொட்டு ஆணையிட்டது பொய்யோ என்க. பொய்விட்டுதோ - பொய்யாகக் கூறிய ஆணை விடுபட்டதா? பரத்தையர் மெய்யேதான் சதமோ - பரத்தையரின் மேனிதான் உனக்கு எப்போதும் நிலையோ. வேள் - மன்மதன். மலர் வாளி - புஷ்பபாணம். பெய்ய - என்மீது சொரிய கருகி - உன்மீது காதலால் வெம்மி. உயிர் தாங்காது.

10. கரும்பு ஓச்சு-கரும்புவில்லை உயர்த்திய. வேள் - மன்மதனின் கணைக்கு - பூவம்புக்கு. இலக்கு ஆச்சு - குறியானேன். என்நெஞ்சு கருத்தலைவாய்த்துரும்பு ஆச்சு. துணைமனதும் - என்னைச்சேர்ந்த உன்மனதும். இரும்பாச்சு - இரும்புபோல் இறுகியுள்ளது. என் இருகொங்கைகளும் அன்னமிடும் மயமாச்சு; காதல் வெம்மை

நாமே ஒருவம்பு செய்திலம் என்னை
நாடிவந்து
மா மோகம் பூட்டித் தழுவா திருக்கில்உன்
மாரன் எனை
மாமேக மார்பகம்துளைத் தாவிவிடுவேன் பழனிக்கு
அதிபதியே.

12 போமாம் கதிர்மதி வந்திடுமாம் அந்திப்
போதுடலம்
வேமாம் கருங்குயில் கூப்பிடுமாம் தெரு
வீதியெங்கும் (அத்)
தேமாங் கனிகள் சிதறும்அவை யுதிர்ந்தே
தேன்சிந்து
மாமாங் கறிந்தே பிரிந்தாய் பழனிக்கு
அதிபதியே.

13 தூறாச்சு அன்னை வசையிங்கு வேள்கணை
தூவவுடல்

---

கொண்டவர் மார்பகத்தில் அன்னப்பூச்சிடுதல் உள்ளது. நான்காம் வரி ஏட்டில் சிதைந்து விடுபட்டுள்ளது.

11. இனி அழுதால் போமோ - இனி நான் அழுதால் உன்மீதுள்ள காதல் மறையுமோ. நாமே - நானே. வம்பு - வழக்கு. மோகம் பூட்டி - காதலில் மூழ்குவித்தபின். தழுவாது இருக்கில் - இன்னும் என்னைச் சேராதிருந்தால். உன்மாரன் - உன்நட்பினனான மன்மதன். எனை - என். மாமேக மார்பகம் - கறுத்து வெளுத்த மேகம் போல் பசலைபடர்ந்த என் மார்பகத்தை. துளைத்து-பூவம்புகளால் துளைக்கப்பட்டு. ஆவி - என்உயிர். விடுவோம் - விடுவேன்.

12. கதிர் போமாம் - சூரியன் மறைவான். போம் ஆம் - மறையும். மதி - சந்திரன். அந்தி - மாலை. உடலம் - என்மேனி. வேம் ஆம் - வெந்துவிடும். வீதியெங்கும் தேமாங்கனிசிதறும். கதிர்மறைதல், மதிவருதல், அந்திப்போது; குயில் கூவுதல், மாங்கனி உதிர்ந்து தேன்சந்துதல் இளவேனில் காலம்; காதலிக்கு காதல் நோய் மிகுவிக்கும் காலம்; பாங்கே - காதல்நோய் மிகும் தன்மையுடைய காலத்தை.

மாறாச்சு வட்டமதிப் பகையாச்சு நல்
வார்த்தை கவண்
ஏறாச்சு உனக்குத் தயவிலையே என்
கண்ணிரண்டு
ஆறாச்சடா அறிந்திலையோ ஐயா பழனிக்கு
அதிபதியே

14 சும்மா நீ பண்ணின ஆசார மாரிக்கும்
சூதையும்தான்
எம்மாத் திரமென் றறிந்திலனே இது
ஏது விடும்
நம்மாலே வந்ததுக் கும்மை யெல்லாம் சொல்லி
என்னபயன்
அம்மம்ம நீவெகு கள்ளன்காண் பழனிக்கு
அதிபதியே

15 பயிலாள் எனைமுகம் பாராள் என்பேதை இப்
பாரறிய
மயிலாய் இப்போது என்ன மார்க்கம் செய்தாய்மற
வாமலுன்னை
கயிலாச வாசன் புதல்வா......
ந்தி நிறம்

---

13. தூறு - பழிச்சொல். அன்னையின் வசை தூறு ஆச்சு. வேள்-மன்மதன். உடல்-என் உடல். மாறு ஆச்சு-மாறுதலை அடைந்தது' வட்டமான மதி; சந்திரன். நல் வார்த்தையாகிற கவண். கவண்-எறிகல் கயிறு. ஏறு ஆச்சு - எறிந்தாயிற்று; ஆறு ஆச்சடா - கண்ணீரால் ஆறுபோல் ஆயிற்று; அடா என்றது முருகனை.

ஆச்சு என்பது வழக்குச் சொல்.

14. சும்மா - வெறிதே. எம்மாத்திரம் - எத்துணையளவு. இது ஏது விடும் - இச்செயல் என்ன விட்டு விடும்? நம்மாலே-என்னால்; வந்ததுக்கு-ஏற்பட்டதற்கு. அம்மஅம்ம : வியப்பு. அடுக்குச் சொல். வெகு - பெரிய.

15. எனை பயிலாள்-என்னுடன் எப்போதும்போல் பழகவில்லை. இது நற்றாய் இரங்கல். முகம் பாராள் - என் முகத்தை நேராகப்

அயிலாள் விழி துயிலாள் பழனிக்கு
அதிபதியே

16 நேற்றுப் பழகின மாதருக் காயெனை
நீதி கெடத்
தூற்றத் தலைப்பட வாறு நன்றே தொல்லை
நாள் முதலா
ஏற்றுப்பிற....................
உன்னை விரும்பினதும்
ஆற்றினில் கரைத்த புளியோ பழனிக்கு
அதிபதியே

17 உன்னையும் நல்லவன் என்றாசை கொண்டது
உலகறியும்
என்னையும் வம்பியென் றறியவைத்தாய்
இதனால் வெகு
சன்னைகள் சொல் லம்புகள் ஏச்சு
களும் பகைக்க
அன்னையும் அப்படி யாச்சே பழனிக்கு
அதிபதியே

---

பார்க்கவில்லை. பயிலாள், பாராள் என்பேதை. இப்பராறிய மயிலாய என் பேதை; மயிலாய - மயில் போன்ற பருவச் சாயலை உடையவளான. என்ன மார்க்கம் செய்தாய் - என்ன தந்திர மார்க்கம் செய்தாய். உன்னை மறவாமல் விழி துயிலாளே என்க. மூன்றாம் வரியில் இறுதிப் பகுதி ஏட்டில் சிதைந்துள்ளது. இப் பாடல் நற்றாய் கூற்று.

16. மாதர் - பரத்தையர். எனை நீதி கெட - உன்னால் விரும்பப் பட்ட என்னை நீதியில்லாமல். தூற்ற - பழி கூற. தொல்லை நாள் - முன்னாளிலிருந்து. ஆற்றினில் கரைத்த புளிபோலக் கரைந்துவிடுமோ.

இப்பாடலில் மூன்றாம் வரி இறுதி சிதைந்துள்ளது.

17. ஆசைகொண்டது, உலகறியும். வம்பி - துடுக்குக்காரி. அறிய - தெரிய. சன்னைகள் - சரசப்பேச்சுகள். சொல்லம்பு - வைத சொற்கள். ஏச்சுகள் - பழிச்சொற்கள். அன்னையும் பகைக்க - என் தாயும் என்னைப் பகையாக நோக்க.

18 சிறியா ளிவளென்று சொன்னதினாலே மெள்ளத்
தெட்டிவிட்டு
பிறியாதது போல் தலைதொட் டாணை
யிட்டனை
நெறியில் லையோ சொன்னபேர்க்கு மதன்
கோட்டி கொள்வ(து)
அறியாதது போல் இருந்தீரே பழனிக்கு
அதிபதியே

19 போங்காரியம் அறியா வம்பி வாசலில்
போனதற்கு
புாங்காக.........
............
ஆங்கா ரியமும் அறியாது பேசத்
தகாது கண்டீர்
ஆங்கா ரியம் உரையீரோ பழனிக்கு
அதிபதியே

20 மையாரும் பூங்குழல் மானார்
கலவி மயக்கத்திலே
நையாமல் உன்னையும் நான்மறவாது
ஏங்குகின்றேன்

---

18. சிறியாள்-என்னைச் சிறியபருவத்தினாள் இவள் என்று தெட்டி விட்டு - ஏமாற்றிவிட்டு. பிறியாததுபோல் - பிரிவுறாததுபோல. எதுகை நோக்கி, பிரியாது என்பது பிறியாது என்றாயிற்று; சொன்னபேர்க்கு - ஆணையிட்டுச் சொன்னவர்க்கு. நெறி-ஒழுங்கு முறை. சொன்னபேர்க்கு நெறியில்லையோ. மதன் - மன்மதன். கோட்டி - பரிகாசம், நிந்தை.

19. போம் காரியம் அறியா வம்பி-உன்னுடன் போகின்ற காரியம் எதற்கு என்று அறியாத (என் பெண்) துடுக்குக்காரி. வாசலில் - உன்னுடைய மலைவாசலுக்கு. ஆம் காரியம் - ஆகவேண்டிய காரியம்; இனி செய்யவேண்டிய காரியம்.

20. மை - கறுப்பு; கூந்தலுக்குப் பூசும் சாந்து. மானார் - மான் போன்றவர்களான பரத்தையரின். நையாமல் - நீ மெலியாமல்.

பொய்யாமல் அத்தோகை மயிலேறி வந்து
புறப்படுவாய்
அய்யா பராக்குச் சுவாமீ பழனிக்கு
அதிபதியே

21 நடந்தாறு மாதமும் நீசொன்ன வார்த்தையி
னாலும் முத்து
வடம்தாம் என்ற...............
மதியாமல் உன்பின்
துடர்ந்தேறிப் பொன்மட வாள்இவள் என்று
தூஷணித்து
அடர்ந்தேறி என்னை வையாளோ பழனிக்கு
அதிபதியே

22 ஏசாதும் ஏசிச் சரிமாதர் முன்னம்
இகழ்ந்து பேசி
வேசியர் பால்வெகு பேதம் செய்தீர் உம்
பெருமை ஒன்று
கூசாது முந்தித் தலைதொட்டுச் சந்தியில்
கோட்டி கொள்வ(து)
ஆசாரமோ குமரேசா பழனிக்கு
அதிபதியே.

---

பொய்யாமல்-தப்பாமல். அ தோகை-அந்தத் தோகையையுடைய; பராக்கு: தலைவன் புறப்பாட்டுக்கு முன் 'பராக்கு' என்று கூறுதல் மரபு.

21. ஆறுமாதமும் நடந்து. உன்னைப் பின் தொடர்ந்த மடவாள் இவள் என்று. தூஷணித்து - (பழிச்சொல்) குறைகூறி. அடர்ந்து - நெருங்கி. இப்பாடலில் இரண்டாம்வரி ஏட்டில் சிதிலமாயுள்ளது-

22. ஏசாதும் - வையக்கூடாததுமான வார்த்தைகளை. சரிமாதர்- எனக்குச் சமமான மகளிருக்கு முன்பு. வேசி - பரத்தை. பேதம் - வஞ்சனை. தலை தொட்டு - என் தலையைத் தொட்டு. கோட்டி- மாறுபாடு. ஆசாரமோ - ஒழுக்கமோ, பழக்கமோ.

23. சரவை - குறை. அற - கெட. கங்கணம் கட்டியவாறு -

23 சரவை யற வெந்தன் வீட்

.......................

பரவையி லேவிட்ட வாயிது ஏன்பல
காலு மென்றன்

மரபை யழிக்க நீ கங்கணம் கட்டிய
வாறுநன்று

அரவை அணிந்தவன் பாலா பழனிக்கு
அதிபதியே

24 பயனைப் பொருளை அறியாத பேதை
பசந்து நின்றாள்

நயனத் திலேகுடி கொண்டிருப் பாய்வள்ளி
நாயகனே

சயனத்தி லேஎந்த வேளையிலும் உன்
றனைமறவாள்

அயனைத் தளையிட்ட கோவே பழனிக்கு
அதிபதியே

25 தூறாக வுற்ற மனம் ஏசத் தென்றல்
துயர்வருத்த

...............................கணைதூவ
மெலிவதது

---

காப்புக் கட்டிய விதம். பாலா - இளையவனே, முருகனே. முதல் ஈற்றுப் பகுதி ஏட்டில் சிதைந்துள்ளது.

24. பயனையும் பொருளையும். பசந்து - பசலைகொண்டு. நயனந்திலே - என் கண்களிலே. சயனம் - படுக்கை. அயனை - பிரமனை. தளை - (சிறை) விலங்கு.

25. தூறு ஆக - பழிச் சொற்களாக. உற்ற சனம் - உறவு கொண்ட சனங்கள். தென்றல் - தென்றற் காற்று. துயர் - என் காதல் பிரிவுத்துயரத்தை. வருத்த - மேலும் வருந்தச் செய்ய. கணை - பூவம்பு. தூவ - மன்மதன் விடுதலைச் செய்ய. மெலிவது அது - நான் மெலிகின்றதை அறிவிக்கும் அச் சொற்கள். உன் பன்னிரு காதுக்கும் ஏறாது; நான் செய்வது ஏது கொல். ஆறாத- பொறுக்காத.

ஏறாது பன்னிரு காதுக்கும் நான் செய்வ
தேது கொல்லோ
ஆறாத காதல் தந்தீரே பழனிக்கு
அதிபதியே.

26 செப்பிடு வித்தை மார்க்கமும் அந்தத்
தெரிவையர்க்கே
இப்படி இங்குச் செல்லாது

..........................

சொற்படி கேட்டு நடப்போம் எனத்தினம்
தோறும் வம்பும்
அப்படி செய்யவு மாச்சே பழனிக்கு
அதிபதியே

27 சம்புக்கும் தேவிக்கும் பாலனாய் வந்த
சண்முகனே
வம்புக்கும் ஆளல்ல வென்றிருந் தேன் வார்த்தை
யெல்லாம்

---

26. செப்பிடுவித்தை - மாயாஜாலக்கலை. தெரிவையர் - பரத்தையர். சொற்படி - பரத்தையர் சொற்படி.

இரண்டாம் வரி இறுதியில் ஏடு சிதைந்துள்ளது.

27. சம்பு - சிவபெருமான். தேவி - உமாதேவி. வம்பு - வழக்கு. ஆள் அல்ல - நீர் ஆளாக மாட்டீர். வார்த்தை - உமது வார்த்தை. மெத்த - மிகவும்.

28. அயில் - வேல்.

'உன் கையில் பிள்ளை உனக்கே அடைக்கலம்' என்பது பெரு வழக்கு. (திருவெம்பாவை)

இரண்டாம் வரி இறுதி ஏட்டில் சிதைந்துள்ளது. அங்கயற் கண்ணி - மீனாட்சியின்.

29. நாற்காலமும் - விடியல், நடுப்பகல், மாலை, இரவு ஆகிய நான்கு போதும். மதன் - மன்மதன். உற்றது ஒன்றை - ஏற்பட்ட ஒருத்தியின் தொடர்பை. ஆர்க்காகிலும் - யாருக்காவது.

நம்பிக்கை யில்லை பிரிந்தீர் இது மெத்த
நியாயமல்ல
அம்புக் குழாயாய் மெலிவனோ பழனிக்கு
அதிபதியே

28 செங்கை யயிலும் மயிலும்செஞ் சேவலும்
தேவர் தொழும்
அங்கையைச் சென்று..............வள்ளி
நாயகனே
உங்கையிற் பிள்ளை உனக்கே அடைக்கலம்
உண்மைகண்டாய்
அங்கயற் கண்ணி பாலா பழனிக்கு
அதிபதியே

29 நாற் காலமும் உன்னை நம்பின பேதையைத்
தள்ளிமதன்
போர்க் காகச் செல்லும் உன்
புகழை இந்த
ஊர்க்காகச் சொல்லு மல்லாது நன்றாச்சுமக்கு
உற்றதொன்றை
ஆர்க்கா கிலும் சொல்லும் கண்டீர் பமனிக்
கதிபதியே

30 மாமா வெனுமையன் மருகா ஆபத்துக்
காத்தவமைந்தா
கோமான் தமிழ்க் கொற்கையூர் காவலன் மிகக்
கூறும் செஞ்சொல்

---

இரண்டாம் வரி இறுதி ஏட்டில் சிதைந்துள்ளது.

30 மாமா எனும் ஐயன் - திருமால் மருகன் - முருகன் கோமானா கிய தமிழ்க் கொற்கையூரின் - காவலன் கூறும் செஞ் சொல்

பாமாலை கந்தன் பழனியில்
படிப்பவரே
தாமா நிரந்தரம் வாழ் வெய்துவார் இது
தானுண்மையே

பழனி மாலை முற்றும்.

---

பாமாலையை இப்பழனி மாலையை பாடிய ஆசிரியன் பெயர் கொற்கையூர் காவலன் என்பது பெறபடுகின்றது.

தாமா - தாமாகவே நிரந்தரம் - எப்போதும்.

# கும்பேச்சுரர் மாலை

## திருச்சிற்றம்பலம்

1 பழமலையும் தேனலையும் பாற்கடலும் ஒன்றாய்
விழவித் தயிர்க்கடலை விட்டுழக்கி அளவளாய்
எள்ளுருண்டை பிட்டிட் டெடுத்திறுக வேயுருட்டி
கொள்ளும் குடல்வயிற்றுக் கோன்

2 சீலம் திகழும் அடியார்தம் உள்ளத் துளே
திரிந்து
ஞாலம் திகழும் பொருளாகியே நின்ற
நன்மைத் தன்றி
வாலம் திகழும் மதியைக் சடைவைத்த
வாற தென்னே
கோலம் திகழும் மதில்சூழ் குடந்தைக்கும்
பேச்சுரனே

3 கடிபடு வான்மலராற் பணியார் கண்ணிணை
களிப்பவடி
முடிதாழ்த் தகங்கொண்டு நில்லார் அப்
பால் விரும்பி

---

1. பழம் அலையும் - பழம் (கலந்தும்) திரண்டும். தேன் அலையும் - தேன் திரண்டும். ஒன்றாய் - ஒன்றாக. விழ - வீழந்து சேர. இத் தயிர்க்கடலைவிட்டு - பழம், தேன், பால் கலந்து தயிர்க்கடலில் விட்டு. உழக்கி - கலக்கச் செய்து. அளவளாய் - ஒன்றுதிரட்டி. எள்ளுருண்டையும் பிட்டும் இட்டு எடுத்து இறுக உருட்டி, கொள்ளும் - உட்கொள்கின்ற உட்கொள்கின்ற குடலையே வயிறாக உடைய கோன்; விநாயகன் என்றவாறு. இது காப்புச் செய்யுள்.

2. சீலம்-நற்செய்கைகளுடன். திரிந்து-உலாவி. ஞாலம்-பூமியில். பொருள் - சிவஞானப்பொருள். நன்மைத்தன்றி - நன்மையல்லாமல். வாலம் - வைடூரியம் போல். திகழும் - விளங்கும் மதி - சந்திரனை. கோலம் - அழகு; அலங்காரம். மதில் சூழ் - மதிலால் சூழப்பெற்ற. குடந்தை ; குடந்தை மாநகரின் கண் எழுந்தருளியுள்ள கும்பேச்சுரனே; சிவனடியார் உள்ளத்தில் இடம் பெற்ற சிவபெருமான், சந்திரனைச் சடையில் வைத்துக் கொண்டது என்ன தன்மை என்றவாறு.

மடிவிடு சிந்தையராய்த் திகழார் உய்யு
மாற தென்னே
கொடிநெடு மாட முகில் தோய் குடந்தைக்கும்
பேச்சுரனே

4 அருமறை ஓதிப் பலவண்டமும் படைத்
தாசிலாதார்
திருமல ரானும் கடல்மேல் துயின்ற
திறலரியும்கரி
பொரு கண்ட நிற்காணா தலம்வரக்
கண்டதென்னோ
குருமணி மாட முகில்தோய் குடந்தைக் கும்
பேச்சுரனே

5 கையா ரவும் இரு கண்ணா ரவும் கவி
னால் விளங்கு
மெய்யா ரவும்மிக் குறுதலை யாரவும்
மேதினிக்குள்
பொய்யார விட்டுநின் பொற்றாள் பரவிப்
புனையமலர்

---

3. கடிபடு - வாசனை பொருந்திய. வான்மலரால் - சிறந்த பூக்களால் அருச்சித்து. அடிமுடி தாழ்த்து - பாதமும் தலையும் படிய நிலத்தில் விழுந்து வணங்கி. அகம் கொண்டு - சிவனை உள்ளத்தில் கொண்டு மடி - சோம்பல். உய்யுமாறு அது என்னே - பிழைக்கும் வழியானது எது. முகில்தோய்ந்த கொடி நெடுமாடத்தையுடைய குடந்தை என்க.

4. ஆசுஇலாதார் - குற்றம் இல்லாதவர்கள். அருமறை ஓதி பல அண்டமும் படைத்த திருமலரானும்-பிரமனும். கடல் - பாற்கடல். அரி - திருமால். கரி பொரு கண்ட - விஷத்தை ஏற்றுக்கொண்ட கழுத்தை உடைய சிவபெருமானே. நின் காணாது - உன் அடியையும் முடியையும் தேடிக் காணாமல். அலம்வர - வருந்தி நிற்க. மலரானும் அரியும் காணாது அலம்வர. ஆசி லாதார் கண்டதென்னே என்க; ஆசிலாதாராகிய மலரோனும் அரியும் காணாது அலம்வர கண்டது என்னே எனறுமாம்; கண்டது

கொய்வாற் கிரங்கும் விழவார் குடந்தைக்கும்
பேச்சுரனே

6 பண்டாலின் கீழரும் நான்மறை ஓதிநற்
பாதம் தொழக்
கண்டாற் கருளினையங் கதைப்போல் என்
கருத்தடங்க
விண்டாய் மெய்ஞானம் இதைப்போல் இம் மேதினி
யோற்கு மின்பம்
கொண்டாடச் செயும்நல் விழவார் குடந்தைக்கும்
பேச்சுரனே

7 உமையாள் கணவ வென்றுள்கி யிராப்பகல்
உண்மையதா
எமையா ளுதி நீ யென்றிருத்தல் ஓரேன் எழு
பாரடங்க

---

என்னே - அறிந்து பார்த்ததுதான் என்ன? குருமணி - சிவந்த மணிகள் பதித்த.

5. கை ஆரவும் - கைகள் இரண்டும் ஒன்றுபட்டுப் பொருந்த. கண் ஆரவும் - கண்கள் இரண்டும் உன் வடிவத்தை நிரம்பவும் கண்டும். கவின்-அழகு. மெய் ஆரவும் - உடல் பொருந்த நிலத்தில் வீழ்ந்து வணங்கியும். தலை ஆரவும் - தலை பொருந்த வணங்கியும். பொய் ஆர விட்டு - பொய் பேசுதலை முழுமையாக நீங்கி. பரவி - வணங்கி. புனைய - அணிவதற்கு. கொய்வாற்கு - பறிப்பவர்க்கு. இரங்கும் - கருணை காட்டுகின்ற; கும்பேச்சுரனே. விழவு ஆர் குடந்தை - எப்போதும் விழாக்கள் பொருந்திய குடந்தையில் எழுந்தருளிய.

6. பண்டு - முன் நாளில். ஆலின்கீழ் - ஆலமரத்தின் நிழலின் கீழே. அரும் நான்மறை ஓதி - அரிய நான்கு வேதங்களால் புகழ்ந்து. நின் பாதம் - உன்னுடைய பாதங்களை. தொழ - வணங்க. கண்டாற்கு - உன்னைக் கண்ட அம்முனிவர்க்கு; சனகர்-சனந்தர், சநாதனர், சனற்குமாரர் ஆகிய நான்கு முனிவர்களுக்கு ஆலமர நிழலில் சிவபெருமான் அமர்ந்து அருள் செய்தார். அருளினை - அருள் புரிந்தாய். அங்கு அதைப் போல் - அவ்

அமையாத சீற்றக் கொடுந்திறல் அந்தகள்
அடியேமைக்
குமையாது காத்தல் கடன் காண் குடந்தைக்கும்
பேச்சுரனே

8 போராழி வட்டப் பொருகடல்சூழ் பொன்னி
மண்டலத்துள்
ஆரா வமுதொத்த பெருகி............

..............................

சீரார் காரோணத் துமையொடு நீநின்ற
செப்பமென்னே
கூரார் பொன்மாடத் தழகார் குடந்தைக்கும்
பேச்சுரனே

அசல் ஏட்டுப்பிரதி நீ. 33ல் 9வது பாட்டின் 4ம் அடிமுதல் 44வது பாடல் வரையில் ஏடுகள் இழந்திருக்கிறது.

---

விடத்து அருள் புரிந்ததைப் பேபல. என் கருத்து-என் உள்ளத்தில். அடங்க - நிறைய. மெய்ஞானம். விண்டாய் - உண்மையான பிரமப்பொருளை உபதேசம் செய்தாய். இதைப்போல் - இங்கு எனக்கு அருள் செய்ததைப்போல். இம்மேதினியோர்க்கும் - இப் பூமியில் உள்ள அனைவருக்கும். கொண்டாட - பெற்றிட. 'நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்பது ஆன்றோர் மொழி. விழவு - திருவிழாக்கள். ஆர் - பொருந்திய.

7. என்று உள்கி - என்று கூறி உள்ளம் நினைந்து. உருகி உண்மையதா - உண்மையாக. எமை - எங்களை. ஓரேன் - நினைத்துப் பார்க்கவில்லை; தெளிவுறேன். அமையாத - பொருந் தாத. அந்தகன் - யமன். குமையாது - அடித்துத் துன்புறுத்தா மல். கடன் - உன்கடமை.

8. போர் ஆழி வட்டம் பொரு - போர்க்களத்துச் சுழலும் சக்கரம் போன்று வட்டம் கொண்டு கரைகளைப் பொருகின்ற அலைகளை யுடைய. பொன்னி மண்டலத்துள் - சோழ நாட்டுக்குள். ஆரா அமுது - கிடைத்தற்கரிய அமுதம். காரோணத்து - குடந்தைக் காரோணத்துள். செப்பம் - செல்வி. கூர் ஆர் - மிக்க அழகு பொருந்திய. இரண்டாம் வரியில் இடையே ஏடுசிதைந்துள்ளது.

9 நிலையாரப் பெற்று குணம்குறி விட்டுநிட்டா
பரராய்த்
தலையாரப் பெற்றுஅத் தபோதனர் தண்ணளி
யாற்பரவி
மலையாது காணப் பணிப்ப தல்லால்.............
..............................
.......................................கும்
பேச்சுரனே

10 விதிகொள் புவன மனைத்துடன் மால்அய
னாய்த்தனது
மதிகொள் திதியும் அடங்கத் துடைக்கும்
வகையறியேன்
நதிகொள் மதியும் நஃகுதலை மாலையும்
திகழ்திரையால்
குதிகொள் சடைக் கற்றை யெந்தாய் குடந்தைக்கும்
பேச்சுரனே

---

9. நிலை ஆரா பெற்று - ஒரு நிலையில் இருக்கும் தன்மையில் பொருந்தப் பெற்று. குணமும் குறியும் விட்டு. நிட்டாபரராய் - நியமநிஷ்டைதவறாவராக. தலை ஆர - முதன்மை பொருந்த தண்ணளி - கருணை. பரவி - புகழ்ந்து கூறி. மலையாது - தயக்க முறாமல், பணிப்பது - கட்டளையிடுவது. இப்பாடலின் நான்காம் வரிமுதல் 44வது பாடல் வரை ஏடுகள் இழப்புற்றுள்ளன.

10. விதிகொள் - இறைவன் விதித்தலைக் கொண்ட. மால் - திருமால். அயன் - பிரமன். மாலாயும் அயனாயும். தனது என்றது சிவபெருமானை. திதி - (நிலைபெறுதலையும்) காத்தலையும். துடைக்கும் - அழிக்கின்ற. வகையை யாதென்று அறியேன். நதி - கங்கை. நதியும் மதியும் கொண்டு. கொள் - கொண்டு. நஃகுதலை மாலையும் - இகழச்சிபுரியும் தலைகளால் ஆனமாலையும். திகழ் - விளங்குகின்றதும். திரையால் - (சடையில் சூடிய) கங்கையின் அலைகளால். குதித்தலைக்கொண்ட. சடைக்கற்றை - சடைத் தொகுதிகளையுடைய.

11. கடி - வாசனை. மலர் - கொன்றை. கலைவெண்மதி - கலைகளையுடைய பிறைச்சந்திரன். கடுவாய் - புலியின் தோலும்.

11 கடிகொள் மலரும் கலைவெண் மதியும்
கடுவாயும்
வடிகொள் புனலும் எருக்கிள வன்னியும் ஊ
மத்தினெடு
செடிகொள் தலையும் இளவாமை மீனுரு
சினப்பன்றியும்
குடிகொளச் சடைக்கற்றை செவ்வான் குடந்தைக்கும்
பேச்சுரனே

12 ஆடிய கூத்தும் அரங்கின் பெருமையும்
ஆயிழையாள்
பாடிய பாட்டும் அப்பாட்டின் பயனும்
பவித்திரமாய்
நீடிய லோகமும் காண்பவர்எவர் நின்
நினைந்துபல
கோடிய ராம் ருத்திரர் பண்குடந்தைக்கும்
பேச்சுரனே

---

வடிகொள் - சொரிகின்ற. புனல் - கங்கை. எருக்கு - எருக்க மலர்; வன்னி - வன்னியிலே, பூ, ஊமத்தினொடு - ஊமத்தைப் பூவுடன்- செடிகொள் - முடைநாற்றம் கொண்ட. ஆமை, மீன்; உருசினம். அச்சம் தரும்கோபத்தைக்கொண்ட. குடிகொள - தன்னிடம் புகலடைய. சொவ்வான் போன்ற சடைக்கற்றை கொண்ட கும்பேச்சுரள்.

12. ஆடிய - சிவபெருமான் ஆடிய. கூத்து - நடனங்கள். அரங்கின் பெருமை - வெள்ளியம்பலம், பொன்னம்பலம் முதலான வற்றின் பெருமை. ஆயிழையாள் - உமை. சிவபெருமான் கூத்து நிகழ்த்தும் போது அதற்கேற்பபாடினாள் என்பது. பவித்திரம் - தூய்மை. எவர் - யார்? நின் நினைந்து - உன்னையே எண்ணி. காண்பவர் எவரோ, அவர் பலகோடியராம் ருத்திரர் ஆயினர் என்றவாறு. பண் - இசையால் சிறந்த.

13. எனைக்காத்து. அச்சம் - தீயசெயலால் அதன் பயனை அனுபவிக்க வேண்டுமே என்று பயம். ஆண்டு - ஆட்கொண்டு. பச்சம் இலாது - பாரபக்ஷம் இல்லாமல். பரந்து - எங்கும் நிறைந்து. இரண்டு அற்றனன் - இரண்டு என்பது இல்லாது ஒரே தத்துவ மானவன். பண்டு - பழமையில். உளதாம் - உள்ளதாகிற.

13 அச்சமில் லாவண்ணம் காத்தெனை ஆண்டறி
வித்தலுமே
பச்சமில் லாது பரந்துஇரண் டற்றனன்
பண்டுளதாம்
நிச்ச மிலாநிலை யெல்லாம் நிலை பெற்று
நிற்கிலுமோர்
குச்சமிலாது திகழ்ந்தேன் குடந்தைக்கும்
பேச்சுரனே

14 வாச்செங் கணும் பரந்தங்கொர் அளவின்றுஇவ்
வாறகன்ற
தாச்செங் கணும் இனியங் கதுவன்றி
யகிலமெல்லாம்
போச்செங் கணும் புறம்புள்ளின் வலையென்று
புளகங்கொண்ட
கோச்செங்க ணன்தொழ நின்றாய் குடந்தைக்கும்
பேச்சுரனே

---

நிச்சயம் - நித்தியம். இலாநிலை - இல்லாத நிலை. புறக்சமயங்களின் தன்மை. குச்சம் - குறை, புறச்சமயங்கள் மீது குறை கூறுதல்.

14. எங்கணும் வாச்சு-எல்லா இடங்களிலும் வாய்த்து. அளவின்று - எல்லையில்லாமல். இவ்வாறு - இத்தகைய பெருமை கொண்டதாக. எங்கணும் அகன்றது ஆச்சு . எல்லா இடங்களிலும் பரந்து விரிந்ததாக உள்ளது. அங்கு அது அன்றி - அவ்விடத்து, அத்ததையது என்பது இல்லாமல், போச்சு - புகுந்தது, இதுவரை பரம் பொருள் தத்துவம் எங்கும் நிறைந்த தன்மை கூறப்பட்டது. புள் - சிலந்தி. வலை - சிலந்தி கட்டிய கூடு. புளகம் - மெய் வியர்த்தல். கோச்செங்கணான் : சிலந்தியாக இருந்து சிவபெருமானை வழிபட்ட சிலந்திச் சோழனைக் கோச்செங்கணான் என்பது வரலாறு. இந்நிகழ்ச்சி நடைபெற்ற தலம் திருவானைக்கா.

15. விச்சை - வித்தை; கல்வி, வித்து. வித்தில்லாதது விளைவு இல்லை. இச்சை - ஆசை, பற்று. அதுவும் - விளைவும். ஆசையால் வித்தும் விளைவும் உண்டாகின்றன. நிச்சை - நிச்சயத்தன்மை. அல்லாது - இல்லாமல். நிகழப்படா நின்ற - நிகழ்கின்ற; செயல்

15 விச்சை யில்லாது விளையுமது ஒன்றில்லை
மேதினியோர்
இச்சை யல்லாது பின்னேயதுந் தாமில்லை
எப்பொருளும்
நிச்சையில் லாது நிகழப் படாநின்ற
நீர்மைத்தென்னே
கொச்சை யிலாச் செந்தமிழ் நீள் குடந்தைக்கும்
பேச்சுரனே •

16 கலைபயி லாத மனத்தா ரொடும் கற்ற
காட்சியி லோர்
மலைபயி லாத மனத்தார் வதிந்திட்ட
. வாறொக்குமே
நிலைபயி லாத எளியேன்நின் தாளுற்ற
தேயமெண்ணில்
கொலைபயி லாத மெய்யர்வாழ் குடந்தைக்கும்
பேச்சுரனே

17 மலையா தெக்காலமும் மாறு படாதுமறுத்
தழைக்கின்
நிலையாததுஇது யாவர்க்கும் நேர்மை யுறாது
நிலைபிரிந்தங்(கு)

---

படுகின்ற. நீர்மைத்து - தன்மையுடையது. என்னே - என்ன வியப்பு! கொச்சை - இலக்கண வரம்பற்று குறையுடைய சொற்கள். இல்லா - இல்லாத. செந்தமிழால் புகழப்படும் கும்பேச்சுரன்.

16. கலை - பல்கலையும். பயிலாத - பயிற்சி பெறாத. காட்சி - அறிவு நூல். மலைபு இலாத - மயக்கம் இல்லாத. மனத்தார் - நிறைந்த அறிவுடைய சான்றோர். வதிந்திட்டவாறு - ஒன்றாக வாழ்ந்த தன்மை. நிலை - ஒருநிலையில் மனத்தை நிறுத்தும் தன்மை. தாள் - பாதங்களை. நேயம் - உறவு. எண்ணில் - ஆராய்ந்து கூறினால். கலை பயிலாத மனத்தாரொடு, மலை பிலாத மனத்தார் வதிந்திட்டவாறு, நிலைமயிலாத எளியேன் நின் தாளுற்ற நேயம் என்க. கொலை - கொலைத் தன்மை. பயிலாத- பழகாத. மெய்யர் - உண்மையான மேலோர்.

அலையாது காண்டற்குக் காட்சியில் லாது
அணுக்கள்தொறும்
குலையாவது கண்டு கொண்டேன் குடந்தைக்கும்
பேச்சுரனே

18 இழையார் பிளப்பினில் பாதியில் பாதி
இவையும் மிடை
மழையார் அளகம் இணைவரையே கொங்கை
மாதிவட்குப்
பிழையா திடைசிறி தெனும் என்றேவிழி
பேசக்கொலாம்
குழையா ராவதுஎந்தை பெருமான் குடந்தைக்கும்
பேச்சுரனே

---

17. மலையாதது - தயக்கம் இல்லாதது, அழைக்கின் - கூறுவோமானால். உறாது - பொருந்தாது. நிலை - ஒரு தன்மைத்தான நிலையிலிருந்து. அலையாது-திரியாமல், காண்டற்கு-காண்பதற்கு. காட்சியில்லாது - தோற்றம் இல்லாமல். குலை - தொகுதி (கொத்து). பரம்பொருள், நிலையாயும் நிலையற்றதாயும் தோன்றியும் தோன்றாமலும் அணுக்கள் தோறும் தொகுதியாகவும் உள்ளதைக் கண்டேன்.

18. இழையார் - அணிகளை அணிந்த மகளிரின். பிளப்பு-பெண்ணுறுப்பு. இடைக்கரடக்கல். மிடை - நெருங்கிய. மழை - மேகம் அளகம் - கூந்தல், இணைவரை - இரண்டுமலைகள். மாதுஇவட்கு - காதலையுடைய பெண்ணாகிய இவளுக்கு. பிழையாது-தவறாமல் எனும் என்றே - என்று சொல்லி எண்ணி. விழி பேசக் சொல் ஆம் - கண்களின் பார்வையால் பேசுவதற்கோ. குழையாராவது. -எம் பெருமானாகிய சிவனுக்கு முன் நெக்குருகுவது. குழையாராவது பேசக்கொலாம் என்க.

19. வம்பு ஆர் - வாசனை பொருந்திய மடந்தையர்தம்-பெண்களுடைய, கணை-காமக்கணை.ஊடுஉருவ-தன் உள்ளத்தின் நடுவே செல்ல. உடல் தருக்கி - காமவெறியால் உடல் இறுமாந்து. வெம்பாவர் - கொடிய பாவச்செயல் புரிபவராக, வலம்வந்திட்டும் கோயில்கொண்ட உன்னை வலம் செய்து வணங்கியும். எளியேற்கும் - அறிவற்ற ஏழையேனாகிய எனக்கும். உண்டோ-உன்

19 வம்பார் மலர்க்குழல் மாந்தளிர் மேனி
மடந்தையர்கள்
தம்பார்வை யாங் கணைபட்டு ஊடுருவத்
தருக்கியுடல்
வெம்பாவர் வலம் வந்திட்டும் மிக்களி
யேற்குமுண்டோ
கொம்பார் குயிலிசை செய்வான் குடந்தைக்கும்
பேச்சுரனே

20 அருவா யகண்ட பரிபூரண மது
வாய்அளப்பில்
உருவாய் ஓவாத ஒளிமய மாய்எனது
உள்ளமன்றில்
திருவாய் திகம்பரம் தானாய் எனையும்தெருட்
டிக்கொண்ட
குருவாய் இருந்தமை என்நீ குடந்தைக்கும்
பேச்சுரனே

21 ஆரா வழுதொத்து அகம்புறம் என்பதறத்
திகழ்வித்து

---

கருணை கிடைக்குமோ. கொம்புஆர் - மாமரக்கிளையில் அமர்ந்து. குயில் இசை செய் - குயிலானது இசைபாடுகின்ற. வான்-சிறந்த.
20. அருவாய் - உருவற்றதாய். அளப்புஇல் - எல்லையில்லாத. ஓவாத - நீங்காத. உள்ளமன்றில் - மனமாகிற அரங்கில். திருவாய் - அழகுருவாக. திகம்பரம்தானாய் - திசைகளை ஆடையாகக் கொண்ட விசுவருபமாய். தெருட்டி - தெளிவுபெறச்செய்து. என் - என்னவோ!

21. ஆரா - தெவிட்டாத, அரிய. அகம் புறம் - உள், வெளி. அற - கெட. திகழ்வித்து - விளங்கச்செய்து. சோராவரும் - தளர் வில்லாமல் பொருந்தி வருகின்ற. வாராவழி - மீண்டும் பிறவாத நெறி. உடையார் - உடையவர்கள். மயக்கம் - மேலும் அறிவுக் குழப்பம். உண்டோ - உள்ளதாகுமோ. இயற்கைக்கும் கூரார் அழகா - இயல்பான தோற்றத்திற்கும் மிக்குப் பொருந்திய அழகுடையவனே.

சோரா வருமேயச் செழுஞ்சுடர் தன்னைத்
தினம்பரவி
வாரா வழிபெற் றுடையார் தமக்கும்
மயக்கமுண்டோ
கூரார் இயற்கைக்கும் அழகா குடந்தைக்கும்
பேச்சுரனே

22 வரைமகள் காண மதியொடு கொன்றையும்
வாளரவும்
திரைகள் கொண்டார்க்கும் செழுஞ்சடை தாழ்த்தி
திகழ்வித்துன்
அரைவட மாட அணியார்திருத் தில்லை
அம்பலத்துட்
குரைகழல் ஆர்க்கும் ஒருவா குடந்தைக்கும்
பேச்சுரனே

23 வெம்பித்த வாதத்தொடு ஐயும்வந் தடர்த்துமென்
மேலெழுந்து
கம்பித்து அவலக் கடலாஞ் சுடலையுட்
காரணமாய்த்

22. வரைமகள் - உமையம்மை. மதி - சந்திரன். வாளரவும் - ஒளி கொண்ட பாம்பும். திரை - கஙகையின் அலைகள். ஆர்க்கும்-ஒலிக்கின்ற. தாழ்த்தி - கீழே தாழ்த்தி திகழ்வித்து - விளங்கச்செய்து. உன் அரை வடம் - உன் அரையில் கட்டிய பாம்புமாலை. அணி - அழகு. தில்லை - சிதம்பரத்து. குரை கழல் ஆர்க்கும் - ஒலிதரும் சிலம்புகள் பேரொலி எழும்ப (ஆடுகின்ற). ஒருவா-ஒப்பற்ற பரம் பொருளே.

23. வெம் - வெம்மை. பித்துவாதம் - கொடிய பித்தவாத நோய் ஐயும் - கபமும். அடர்த்து - நெருக்கி. கம்பித்து - நடுக்கமுற்று. அவலக்கடல் - துன்பக்கடல். சுடலை - சுடுகாடு. தம்பித்து-நிலைப் பட்டு, தொண்ணூற்றாறுதத்துவங்கள் உள்ளநாடிகள். தட்டுஅழிய - அடியோடுகெட்டுவிட. கும்பித்தவாறு - அடக்கிய விதம்.

தம்பித்துத் தொண்ணூற் றறுவ ரொடும்எனைத்
தட்டழியக்
கும்பித்த வாற தறியேன் குடந்தைக்கும்
பேச்சுரனே

24 தானார வந்தென துள்ளே புகுதலும்
தான்தருக்கி
நானார் இவர்அவர் தாம்ஆர் என்று
நாடலும்என்
ஊனார வந்துஉள் ளிடம்கொண் டெனை உன்னுள்
வைத்ததென்னே
கூனார் மதிச்சடை எந்தாய் குடந்தைக்கும்
பேச்சுரனே

25 ஆரிவன் நம்தமக் கென்றறி யாது
அணுகுதற்கு
காரிய மேதென் றங்கை யுறவுற்று
கலங்குதலும்
பூரிய னாகிவந் துட்புகுந் தேபுறம்
போதலொட்டா
கூரிய னாகினேன் கொண்டீர் குடந்தைக்கும்
பேச்சுரனே

---

24. தான்ஆர - தானே விரும்பிப் பொருந்த. தருக்கி-இறுமாந்து-இறுமாந்து. நான் ஆர் - நான் யார். இவரும் அவரும் ஆர்; ஆர் - யார். நாடலும் - தேடி ஆராயவே. ஊன் - உடலின் பிண்டம். உள் இடம்-இதயத்தை இடமாக. கூன் ஆர்-குறைந்து பொருந்திய. மதி - பிறைச்சந்திரன்.

25. நம் தமக்கு இவன் ஆர் என்று அறியாது என்க. அங்கு ஐயுறவு உற்று என்க. பூரியனாகி - இழுக்கப்பட்டவனாகி. உள் - இதயத்துள். புறம் - வெளியே. போதல் ஒட்ட - போகுதலைப் பொறுக்காத. கூரியன் - அறிவுக் கூர்மையுடையவன். கொண்டீர் என்னை ஆட்கொண்டீர்.

26 பரவருஞ் சிந்தையை ஒல்லென்று விட்டுப்
பரவலுறின்
விரவரும் துன்ப மதனால் இரண்டையும்
விட்டுமிகப்
பரவருஞ் சிந்தை யுடைத்தா யெனைப்பற்றிக்
கொண்டதென்னே
குரவிரி சோலை முகில்தோய் குடந்தைக்கும்
பேச்சுரனே

27 ஆர்த்திட்ட நாகத் தயல்சினக் கொடுவாவைத்
தம்புனலை
சேர்த்திட்ட மாடு செழுமலர்க் கொன்றையந்
தேன்சோர்ந்திடப்
போர்த்திட்ட வான்கரித் தோல்மேற் புரள
முடைத்தலைகள்
கோர்த்திட்ட நாடக மென்னோ குடந்தைக்கும்
பேச்சுரனே

28 கட்டிட்ட வையம் கலந்து இரண்டற்ற
...........ளாமாட
தொட்டிட்ட பெற்றி உருத்திரர் பலகணத்
தூடமுந்தப்

---

26. பரவு அரும் சிந்தையை - சொல்லுதற்கரிய நினைப்பை. ஒல்லெனறு - விரைந்து. பரவலுறின் - சொல்லுதலைப் பொருந்தினால். விரவரும் - அனுகுதற்கரிய. பரவரும் - புகழ்தற்கரிய. குரவு விரி - குராமங்களால் பரந்த. சோலையில் முகில் தோய் குடந்தை.
27. ஆர்த்திட்ட - ஆரவாரிக்கும் சீறலைக் கொண்ட. நாகத்து அயல் - பாம்பின் பக்கம். சினக் கொடுவா வைத்து - சினம் கொண்ட மிருகத்தை வைத்து அம்புனலை-அழகிய கங்கையை.மாடு -சடையின பக்கம். போர்த்திட்ட-மேலே போர்வையாகப் போர்த்திக் கொண்ட. வான் - பெரிய. கரித்தோல் - யானையின் தோல். முடை - புலால் நாற்றம் கொண்ட. போர்த்திட்ட - மாலையாகக் கோர்த்தணிந்த. நாடகம் - சிவபெரு மானின் கூத்து.

பட்டிட்ட வர்க்குஅன்றி எய்தா வினைபத்
தெனைப்பரிந்தான்
கொட்டிட்ட முற்ற விழவார் குடந்தைக்கும்
பேச்சுரனே

29 பந்திட்ட முற்ற கரத்தாள் அவள்ஒரு
பாகமதாய்
வந்திட்ட முற்றென் மனத்திடம் கொண்டதல்
லாதெவையும்
தந்திட்ட தன்றி எவர்க்கும் அரிதெனத்தான்
நின்றதென்ன
கொந்திட்ட சோலை முகில்தோய் குடந்தைக்கும்
பேச்சுரனே

30 மாலிட்ட சிந்தை யவலத் தழுந்தும்
வகையொருக்கி
பாலிட்ட முற்ற மொழியவ ளோடும்
பரந்தென்னுள்ளே
மேலிட் டிருந்த தல்லாது புறம்பும்
விளங்கினனென்
கோலிட்ட மெய்யன்பர் வாழ்வாம் குடந்தைக்கும்
பேச்சுரனே

---

28. கட்டுஇட்ட - பாசத்தால் பிணிப்புற்ற, வையம்-உலகத்தில். தொட்டு இட்ட பெற்றி-என்னைத்தொட்டு ஞானம் உண்டாக்கிய தன்மையால். உருத்திர கணத்துடன் அழுந்த. அழுந்தப்பட்டு - ஆழந்து ஒன்று படச்செய்து. இட்டவர்க்கு - வினைபுரிந்தவர்க்கு எனை வினைபத்து பரிந்தான்-எனக்கு வினைபத்தையும் அறுத்தான் கொட்டு - பறை. முற்றம் - முற்றத்தையுடைய.

29. பந்து இட்டமுற்ற கரத்தாள் அவள் - பந்தை விரும்பிக் கொண்ட கைகளையுடைய உமையம்மையாகிய அவள். இட்ட முற்று - இஷ்டம் கொண்டு. எவையும் - எல்லாப் பேறுகளையும். கொந்து இட்ட - பூங்கொத்துக்கள் நிறைந்த.

31 பாடிட்ட நல்லிசை எத்திறத் துற்ற
பரிசுபெற்றேன்
வாடிட்ட சிந்தை மயக்கம் தெளியநின்
வார்கழற்கே
நாடிட்ட மெய்யன்பர் கூட்டத்தில் நண்புவைத்
தின்புடனாய்க்
கூடிட்ட மென்றெனக் காம்காண் குடந்தைக்கும்
பேச்சுரனே

32 வானினைப் பாகினை வண்டார் குழல்
மாதுடனாம்
கோனினைப் பாலைப் பழத்தைப் பழச்சுவை
யாகிநின்ற
தேனினைத் தேறல் தெளிவைத் திடப்பட
என்னுள்நின்ற
கோனினைப் பாற்படத் தந்தான் குடந்தைக்கும்
பேச்சுரனே

---

30 மால் இட்ட - மயக்கம் பொருந்தின. அவலம் - துன்பம். ஒருக்கி - அழித்து. பாலிட்ட முற்ற மொழியாவள் - பாலின் சுவை பொருந்தினாற் போன்ற மொழியுடைய உமையம்மை. என்னுள்ளே பரந்து மேலிட்டு - மேலாகப் பொருந்தி புறம்பும் - வெளியேயும். என் - இது என்னவியப்பு? கோல்இட்ட - சூழ்ந்து பொருந்திய.

31. பாடு இட்ட - பாட்டுப் பொருந்தின. எத்திறத்து - எல்லா வகையிலும். வாடு இட்ட - வாடுதலைப்பொருந்தின. வார்கழற்கு - கீண்ட கழலணிந்த பாதங்களுக்கு. நாடு இட்ட - தேடுதலைக் கொண்ட. நண்பு வைத்து - உறவு கொண்டு. கூடு இட்டம்-கூடு கின்ற விருப்பம். என்றும் எனக்கு ஆம்.

32. வானினை - ஆகாய வடிவ மானவனை. பாகினை - தேன் பாகு போன்றவனை. மாதுடனாம் கோனினை - உமை யொரு பாகனை. தேறல் தெளிவை - தேனின் தெளிவை. திடப்பட - உறுதியாக. கோனினை - சிவபெருமானை. பால் படத் தந்தான் - வினைப்பயனால் காட்டுவித்தான்.

33 எல்லாம் நீயல்லை நீயல்லா தொன்றில்லை
எனும்திறத்து
நில்லா ரலதுநின் தாள்பணி வாற்கு
நியதமின்சொல்
சொல்லா ரதன்றிக் குடந்தை எண்ணார்தொகு
பல்லுயிரும்
ஒல்லா மொழியும் கல்லார் உய்யுமாறுஎன்(கும்)
பேச்சுரனே

34 பீடார் பெருமைகள் உள்ளவெல் லாமபெற்றுப்
பின்னமுற்று
வாடா வாய்மையுற் றானந்தம் ஆவலித்து
ஏறியொன்றி
ஆடா நிலைமைக் காளாய்உட் புறம்கண்டு
நாள்கள்தொறும்
கோடா மனத்தான் கூட்டாய குடந்தைக்கும்
பேச்சுரனே

35 பற்றேது மின்றியோர் பற்றினைப் பற்றிப்
பலதுரிசு
மற்றே நிலைமைக் காளாகி...........பெற்று
அகம் புறமும்

---

33. எல்லாவற்றுக்கும் நீ காரணமின்றியும், காரணமாயும் உள்ளாய் என்றபடி. திறத்து - இவ்வுண்மைத் தன்மையறிந்து. நில்லார் அலது - நில்லார் அல்லாமல். நியதம் - எப்போதும். சொல்லார் அதுவன்றி - சொல்லாதவராய் அது வல்லாமல். ஒல்லா - பொருந்தாத. உய்யுமாறு - பிழைக்கும் வழி. என் - என்னவோ.

34. பீடு - பெருமை. பீடார் பெருமை - சிறப்புமிக்க பெருமை பின்னம் - கெடுதல். வாடா - கெடுதல் இல்லாத. ஆவலித்தது - பெருகி. ஒன்றி - ஒன்று பட்டு. ஆடா - அசைவுறாத. உள்புறம் - இதயாகாசத்துள்ளே. கோடா - நெறிபிறழாத. கூட்டாய - கூட்டத்தைப் பொருந்தின.

உற்றே நிரம்பியும் வற்றாத இன்பம்பெற்
றார்க்குகந்து
குற்றேவல் செய்யத் தருவாய் குடந்தைக்கும்
பேச்சுரனே

36 பெட்டாடித் தத்தம் பெருமிதத் தால்பெரி
தாயபரங்
கட்டா மரையன்றி என்றுஅவர் கண்கலங்
கக்கொய்து
வட்டாடிச் சென்னித் தொடையும் புனைந்த
வழிகருதிக்
கொட்டாட்டும் பாட்டும் உடையார் குடந்தைக்கும்
பேச்சுரனே

37 கண்டது மாய்கை கரப்பது சூனியம்
கண்டகலக்
கொண்டது காட்சி குறியும் குணமும்இல்
லாதவற்கு

---

35. பற்று ஆசை. ஓர்பற்று - பற்றற்றான்பற்று. "பற்றுக பற்றற்றான்பற்றினை, அப்பற்று பற்றுவிடற்கு" (குறள்), துரிசும்-குற்றங்களும். அற்று - நீங்கிய. பெற்றார்க்கு-பெற்ற ஞானியர்க்கு உகந்து - விரும்பி.

36. பெட்டு ஆடி - பொய்யாகப் புரிந்து. பரம் - பரம் பொருள். கண் தாமரை யன்றி என்று - கண்ணாகிய தாமரையைச் சாத்துவதே கடமை அல்லாமல்என்று திருமால் கருத. அவர்-திருமாலின். வட்டு சூடி-சூதுபுரிந்து. சென்னியில் தொடையும் புனைந்த-தன் தலையின் கண்பூவுடன் கலந்த மாலையும் அணிந்த. வழி - பக்தி நெறி. கருதி-நினைந்து வழிபட்டு. திருவீழிமிழலையில், ஆயிரம் தாமரைப் பூக்களால் சிவபெருமானை அருச்சிக்க விரதம் கொண்ட திருமால், இறையருளால் ஒருபூ குறையவே தன் கண்ணை இடந்து சிவ பெருமானை அருச்சித்துப்பேறு பெற்றார் என்பது வரலாறு. கொட்டும் ஆட்டும் பாட்டும் - வாக்கியங்களின் ஒலியும் ஆடலும் பாடலும்.

37. மாய்கை - அழிவுடையது; மாயை என்றுமாம். கரப்பது -

கண்டது வான பரம்வே றில்லைஎன்று
கலந்துகொண்டேன்
கொண்டல்தார் தண்பொழில் சூழ்க்குடந் தைக்கும்
பேச்சுரனே

38 ஐய மிடார் இன்சொல்தான் உரையார்அது
வன்றியும்ஓர்
பொய்யை விடார் புண்ணியம் கருதார்பொய்யர்
பால் அணுகும்
மையை விடார் மனம்தான் ஒருக்கார்மல
ரீசற்கெனக்
கொய்ய வுறார் என்பெறுவார் குடந்தைக்கும்
பேச்சுரனே

39 அண்டர்கள் தேசு பெறுமுனி வோர்அர
மாதர்மிகு
தொண்டர்கள் அது.........நாரத ராதி
தொகு கணங்கள்
பண்டவர்க் கெக்கா லமும் பணியப்
பரிந்து மிக்க
கொண்டனை யாடவல் லாய்திருக் கூத்துக்கும்
பேச்சுரனே

---

மறைத்துக்கொள்வது. அகலக்கொண்டது காட்சி. கண்டு அதுவான பரம்வேறில்லை என்று. கொண்டல் - மேகம். தார் - நீண்ட.

38. ஐயம் - பிச்சை. மையை - மயக்கத்தை. ஒருக்கார். - ஒன்று படப்பொருந்தார். ஈசற்கு என மலர் கொய்ய உறார். என் பெறு வார் - இவர்கள் என்ன பேற்றைப் பெறுவார்களோ.

39. அண்டர்கள்-தேவர்கள். தேசு - ஒளி. அரமாதர்-அரம்பையர், தேவமாதர். நாரதர் ஆதி-நாரதர் முதலான. பண்டு-முன்காலத்தில் பரிந்து - கருணை கொண்டு. கொண்டனை - அவர்களை ஆட் கொண்டாய். அவர்க்காக திருக்கூத்து ஆடவல்லாய்.

40. மால் - திருமால். மட்டித்து - மண்டலமிட்டு. துவைத்து - தக்கன் யாகத்தில் கலந்துகொண்ட திருமாலையும் பிரமனையும் மிதித்து. எழுவாய் - தோன்றினை. அப்பாலினில் - அண்டத்துக்கு

40 மாலினை நான்கு முகத்தனை மட்டித்துவைத்
தெழுவாயப்
பாலினில் ஆர்த்துக் குருதி ததிகொண்டு
பாறடர்ந்த
வேலினை ஏந்தி விளையாடி மின்னுமை
யாள்பரவக்
கோலினைக் கூத்தென்றும் ஆடவல்லாய்
குடந்தைக்கும் பேச்சுரனே

41 தொட்டிணை யின்றிநின் தொண்டருட் கூட்டியெ
னைத்தொழும்பிற்
பட்டிணை யற்ற பரிசது காட்டிப்
பரிந்தமையே
விட்டிணை யின்றி ஒருங்கே விளங்க
மிகவும் துடி
கொட்டினை யான்கண்டு கொண்டேன்
குடந்தைக்கும் பேச்சுரனே

42 பாற்றுகை நின்றெம் பரம்பர னேயென்று
பன்முறையும்
சாற்றும தன்றி மற்றெதும் தரிக்கிலன்
தாள் தருவாய்

---

அப்பால். ஆர்த்து - ஆர்ப்பரித்து. குருதிகதி - இரத்தத்தயிர். பாறு. பூதங்கள். அடர்ந்த - நெருங்கிய. வேல் - சூலம். பரவ - புகழ்ந்து துதிக்க. கூத்துக்கோலினை - கூத்தாடினை. என்றும் - எப்போதும் ஆடவல்லாய் - அக்கூத்தினை ஆடுவாய்.

41. தொட்டு - என்னைத்தீண்டி (ஸ்பர்சம்) இணையின்றி-அதற்கு ஒப்பில்லாமல், தொழும்பில் - உன் அடியார் பணிக்கூட்டத்தில்; தொழும்பு-இறை அடிமைத்தொழில். பட்டு-உள்பட்டு இணையற்ற - அதற்கு வேறு ஒன்று ஒப்பில்லாத. பரிசு - தன்மை. பரிந்தமை- இரங்கியமை. இணையின்றிவிட்டு - உமையாகிற உன் துணையை விட்டுப்பிரிந்து. துடி - உடுக்கையை. இணையின்றி - தனக் கொப் பில்லாமல்; எனலுமாம்.

ஏற்றுயர் வெல்கொடி எந்தாய் எனத்தொழு
வாற்கிரங்கி
கூற்றறக் கண்ட கழலோய் குடந்தைக்கும்
பேச்சுரனே

43 கணப்பொழு தாயினும் கதிகாட்டுவன் காம்பனை
தோளிகனிவாய்
மணத்தமு தொடு மகிழ்ந்த பிரானென்று
வஞ்சமற
வணித்தலர் சூட்டப் பெற்றார் அன்பதாகி
அவர்தமது
குணக்கடல் ஆன தறியேன் குடந்தைக்கும்
பேச்சுரனே

44 என்னினைப் பாவதிங் கெள்ளள வேனும்இல்லை
யினிதறியின்
உன்னினைப் பாகுமென் றுள்ளத் துறுமது
உன்னையன்றி
பின்னினைப் பேது மிலையிது சத்தியம்
பேச்சுக்கண்டாய்
கொன்னுனைப் பாண விழியார் குடந்தைக்கும்
பேச்சுரனே

---

42. பாற்றுகை நின்று - உரிமையுடன் உன் பக்கலில் நின்று. தரிக்கிலன்-செய்திருக்கவில்லை. ஏற்று உயர் வெல் கொடி-உயர்ந்த வெற்றிமிக்க இடபக்கொடியையுடைய. தொழுவாற்கு - பணிபவர்களுக்கு. கூற்று அற - யமன் அழிய. கண்ட - காலால் உதைத்துத் தள்ளிய.

43. கணம் - ஒரு க்ஷணம். கதி - வீடுபேறுக்குரிய வழி. காம்பு அன தோள்-மூங்கில் போன்ற தோளினையுடைய உமையம்மையின் வாய்மணத்து அமுதொடு. வணித்து-வர்ணித்து. அழகுற அழைத்து- பெற்றாருடைய அன்பதுவாகி.

44. என் நினைப்பு இல்லை. அறியின் - அறிந்தால். உன் நினைப்பாகும். உறுமது - பொருந்திய அது. பின்! நினைப்பு-

45 வானிமிர்ந் தோங்கும் மறைப்பொரு ளால்மண்
ணுலகறிய
கானிமிர்த் துண்ணும் கழுக்களை யாற்றிற்
கனலில்வெப்பில்
தான்நிமிர்ந் தேடிட்டுச் சாதித்து வாது
தருக்கத்தென்னன்
கூனிமிர்த் தான்தொழ நின்றாய் குடந்தைக்கும்
பேச்சுரனே

46 பருவ விமானத்தி றங்கு மரியையங்கே
கால்பாவா
மருவ வவன்நந்தி யுயிர்ப்பினில் வான்திரை
யில்துரும்பாய்
வெருவரக் கண்டு நகைசெய் திருந்த
விரகிதென்னே
குரவரும் சோலை மதிதோய் குடந்தைக்கும்
பேச்சுரனே

---

- பின்னர் வேறு நினைப்பு. கொல் நுனை - கொலைத் தொழில் புரியும் கூரிய முனையையுடைய. பாண - அம்பு போன்ற.

45. வான் நிமிர்ந்து - ஆகாயத்தின் பரப்பிடத்தும் எழுந்து. மறை - வேதம். மறைப்பொருளால் - வேகத்தில் கூறப் பெற்ற மந்திரப் பொருளால். கால் நிமிர்ந்து - காலை நிறுத்தியபடியே. உண்ணும் - பலிஉண்கின்ற. கழுக்களை - கழுகுபோன்ற சமணர்களை. சமணர்களில் நின்றுண்பவர்கள் ஒருவகை. ஆற்றில் - ஆற்றினிடத்து (சமய)வாதத்திலும். கனலில் - கனலிடத்துச் சமய வாதத்திலும். வெப்பில் - வெப்பு நோய் ஏவிவிட்டதிலும். அதுதான் - ஞானசம்பந்தரின் மந்திர ஏடுதான். நிமிர்ந்து - நீரிலே உயர்ந்து நிமிர்ந்தும். ஏடு இட்டு - தீயிலே ஏட்டை இட்ட போதும் எரியாமல் இருந்தும். சாதித்து - சைவ மதத்தை நிலை நிறுத்தி. வாது தருக்க - சமணருடன் வாதம் புரிந்து நிற்கவும். தென்னன் - பாண்டியன். கூன் நிமிர்த்தான் கூன் முதுகுடையனாயிருகத்தை இயல்பாக நிமிர்ந்து செய்தானாகிய திருஞானசம்பந்தன். ஞானசம்பந்தர் சைனருடன் கூனல்வாதம் புனல்வாதம் புரிந்ததையும்,

47 கள்ளார் மலர்கொண்டு காலையும் மாலையும்
காதலித்தன்(பு)
உள்ளார் இரவும் பகலும் உகப்பதல்
லாதுபுறம்
வில்ளார் தம்மொடும் விளங்கு மிதுவல்லாது
வேறுபுறம்
கொள்ளார் பாவல நலமோ குடந்தைக்கும்
பேச்சுரனே

48 படைநெடுங் கண்ணியர் பந்தாடும் மாமறு
கேபரிந்தும்
இடைகெழு வான்கொடி மேல்விண் ணுரிஞ்ச
விளங்கு புத்தூர்
இடமது மேவி யிருந்தெனை வாவென்றது
என்னுரையாய்
கொடைபொழி மேகமன் னார்வாழ் குடந்தைக்கும்
பேச்சுரனே

---

சைனரால் ஏவப்பெற்ற வெப்பு நோய் தீர்த்ததையும் பாண்டியனின் கடன் நிமிர்த்ததையும் தேவாரப் பாக்களில் பரக்கக் காணலாம்.

46. பருவ விமானம் - உயர்ந்த விமனேத்தினின்றும். அரி - திருமாலை. மருவ - பொருந்த. அவன் - திருமால். உயிர்ப்பனில் - சீற்றப் பெருமூச்சினால். திரை கடல். வெருவர - அஞ்சித் தடுமாற. விரகு-தந்திரம்; உபாயம். குரவரும்-குராமரம் நிறைந்த.

47. கள் ஆர் - தேன் நிறைந்த. காதலித்து - இறைவனிடம் நேசங்கொண்டு. உகப்பது - விரும்புவது. வில்ளார் தம்மொடு - தாம் அநுபவித்த பேற்றைக் கூறாராகிய அவருடன். வேறுபுறம் - வேறு புறச் சமயத்தை.

48. படைநெடும் கண்ணியர் - போரில் பயன்படும் வேல் போன்ற நீண்ட கண்ணினையுடைய மகளிர். மாமறுகே - பெரிய வீதியிலே. கொடி விண்ணுரிஞ்ச - கொடி ஆகாயத்தைத் தொட. - புத்தூர் என்பது குடந்தைக்கருகில் உள்ள தலம். புத்தூரில் இடமதுமேவி. என் உரையாய்-என்ன காரணம் என்று சொல்வாய். மேகமன்னார் கொடைபொழிகின்ற குடந்தை.

49 களஞ்சூழ் விடத்த முக்கண்ண கலைசெறி
கையவென்று
வளம்சூழ் மொழிபிறளாது மொழிந்து
வரின் அல்ல(து)
களைஞ்சூழ் வினை ஒழியாது நின்ற
கருத்துணரேன்
குளம்சூழ் பொன்மாடம் அழகார் குடந்தைக்கும்
பேச்சுரனே

50 வாட்டம் கமழ்மனத் தீட்டம் கிளைப்பவர்
உந்திவிடாய்
மாட்டங் கறிவின்றிப் பொய்மயக் காறலை
செய்யவென்றும்
தாட்டங் கறிவுண ராத்தலை யெனையும்
தாங்குவையோ
தோட்டம் கமழ்தண் டலைசூழ் குடந்தைக்கும்
பேச்சுரனே

51 பாட்டுட் பயன்பற்றியப் பற்றற்ற கண்ணின்
பயனுணர்ந்து
நாட்டுட் பொய்யத் தனையும் அறவிட்டு
நல்ம் பெருகு

---

49. களம் - கழுத்தில். கலை - மான். பிறழாது - மாறுபடாமல் வரின் - வந்தால். களைஞ்சு ஊழ்வினை - களைவதற்குரிய ஊழ் வினைகள். ஒழியாது - நீங்காது.

50. வாட்டம் கமழ் - வாடுதலைக்கொண்ட. ஈட்டம் - தேடுதலை. கிளைப்பவர் - தோற்றுவிப்பவர். மாட்டங்கு - அவ்விடத்தில். ஆறலைசெய்ய - வழிப்பறிகொடுந் தொழிலைச் செய்ய. தாள் தங்கு - உன்பாதங்களில் மனமொன்றித் தங்கும். உணராத்தலை - உணராத விடத்து. எனையும் - என்னையும் கோட்டம் - கோயில்கள்

51. பாட்டுள் பயன் - பாட்டின் உள்ளடக்கிய பயன். நாட்டுள் - நாட்டகத்துள். அற - கெட வீடு - மோட்சம். விரகு - உபாயம் கூட்டுள் - இவ்வுடலாகிய கூட்டினுள். கண்டவர் - மெய்ஞானிகள்

வீட்டுட் பயன்கண் டறிவா னந்தத்தின்
விரகதனால்
கூட்டுட் பயன் கண்டவர்வாழ் குடந்தைக்கும்
பேச்சுரனே

52 இல்லையென் னாது இரப்பார்க்கு எள்ளளவேனும்
இட்டருந்த
வல்லைய ராகி மனத்தூய்மை கைவந்து
வஞ்சமெல்லாம்
ஒல்லையின் மாற்றுங் கருத்தால் தனதருள்
உண்டுகொல்(லோ)
எல்லைவெல் வெள்ளேறுடை எந்தை குடந்தைக்கும்
பேச்சுரனே

53 ஆலம் கமழ்கண்ட அன்பதுஇன் றாகி
யறக் கலங்கி
சீலம் கமழ்வழி யாரோடு என்றன்னைச்
சிறிதிரங்காய்
ஏலம்கமழ் குழலி பங்கா என்பார்க்குஇடர்
ஆவதுண்டோ
கூலம் கமழ்தண் விழவார் குடந்தைக்கும்
பேச்சுரனே

---

52. இட்டு - உணவு ஈந்து. அருந்த - பின் உணவருந்த. வல்லையராகி - முடிந்தவராகி. கைவந்து - நிறையப்பெற்று. ஒல்லை - விரைவில். எல் - சூரியனின் ஒளியை.

53. ஆலம் - விஷம். கண்ட - கழுத்தை உடைய நீலகண்டனே. என்றன்னை-என்னையும் சேர்த்து. ஏலம் கமழ்-ஏலப்பூவின்வாசனை வீசுகின்ற. குழலி - உமையம்மை. கூலம் - ஆற்றங்கரை. பண்டம் விற்கும் தெரு எனலுமாம்.

54. சீனம்கூறீர். அவலம்-துன்பம்தரும். மாறீர் - மாற்ற மாட்டீர். ஊறீர் - தொடப்பெறீர். எவ்வண்ணம் அளிப்பான் - எவ்வாறு அருள்தருவான்.

54 ஆறீர் சினம் அன்புசெய்யீர் அவலக்
குணங்களெல்லாம்
மாறீர் எவர்க்கும் வளம்பகரீர் மனம்
நொந்துநெக்கென்
றூறீர் கசிந்துள் ளுருகீர் உபாய
கலைத்துறைகள்
கூறீர் எவ்வண்ணம் அளிப்பான் குடந்தைக்கும்
பேச்சுரனே

55 விடுக்கப் பெறீர் மனைவாடகை வீடீர்என்
மேல்வினையை
கெடுக்கப் பெறீர் இதுஎய்தா தெனினும்
கிளர்ந்த அன்புள்
அடுக்கப் பெறீர்இவை கூடா தெனினும்
அடியவருக்கு
கொடுக்கப் பெறீர்பலி எய்துவனோ நம்
குடந்தைக்கும்
பேச்சுரனே

56 மாதையோர் பாகத் தடக்கி மணிவண்
ணனைஒருபால்
மீதியில் பாகம் பணித்துமின் னேரிடைச்
செந்துவர்வாய்

---

55. விடுக்க - என்னை விடுவிக்க. வீடீர் - நீங்கச் செய்யீர். என்-என்ன இது? கெடுக்க - அழிக்க. எய்தாது - கிடைக்கப்பெறாது. அடுக்க - சேர்க்க. கொடுக்க-ஈகைசெய்ய. பலி எய்துவனோ-நீங்கள் கொடுக்கும் பூசனையை பெறுவானோ.

56. மாதை - உமையம்மையை. மணிவண்ணனை - திருமாலை. பாகம் பணித்து - பங்கில் இருக்கச் செய்து. திருமாலை மனைவியாக ஒரு பாகத்துக்கொண்டவன் சிவபெருமான் என்பது தேவாரம் தாதியாம்-பணிவிடைபுரிபவளான; கங்கை. செருசடை-நெருங்கிய சடையில். உமையை ஒரு பாகத்தும் திருமாலை ஒரு பாகத்தும், கங்கையைச் சடையிலும் கொண்டது என்னே. ஆடும் -விளையாடுகின்ற.

தாதி யாம்குழற் கங்கையைச் செருசடை தாங்
கியதென்னே
கோதைய ராடும் தண்மா மரங்கள்சூழ் குடந்தைக்கும்
பேச்சுரனே

57 பார்மேல் புகழ்பெற்ற காரோணமும் பத்தர்
தாம்பரவும்
சீர்மேல் திகழவி முத்தீச் சுரமும்
திருக்குடந்தை
ஊர்மேல் கிருபைசெய் கீழ்க்கோட் டமும்உகந்
தொப்பில்மதி
கூர்சோம னீச்சுர மும்உடைய யான் குடந்தைக்கும்
பேச்சுரனே

58 உழையார் கரத்தநிற் கன்பின்றி உள்ளமும்
கலாய்மேன்மேல்
தழையா வரச்சந் ததமும் தவத்துக்
கிடுக்கண்தாம்
பிழையா வதுசெய வெள்ளேனும் பிச்சை
யிடுமதற்கே
குழையா மனக் கொடியேன் என்செய்வேன்எம்
கும்பேச்சுரனே

---

57. காரோணாம் - குடந்தைக்காரோணம். அவிமுத்தீச்சுரம் அபிமுக்தீச்வரம். கீழ்க்கோட்டம் - குடந்தைக் கீழ்க்கோட்டம். உகந்து - விரும்பி. மதி கூர் - சந்திரன் பூசித்தலைக்கொண்ட. கோமனீச்சரம் - சோமேசர் கோயில். காரோணத்திலும் அவிமுக்தீச் சுரத்தும் கீழ்க்கோட்டத்தும் சோமீசவரத்தும் கோயில்கொண்ட சிறப்புடையவன் கும்பேச்சுரன் என்றவாறு.

58. உழையூர் - மான்பொருந்திய. நிற்கு - உன்னிடத்து. கலாய் - கல்லாகி. தழையாவர - பணிவில்லாமல் இருந்துவர; தவத்துக்கு - பிறர்புரியும் தவத்துக்கு. இடுக்கண்தாம் - இடையூறாகிற. செய - நான் செய்துவர. எள்ளனேும்-எள்ளளவேனும். பிச்சையிடுமதற்கும் குழையா மனக் கொடியேன். குழையா - இரங்காத.

59 நாவிளங் கிள்ளை மொழியுமை நங்கையை
நண்ணியவர்
சேவிளங் கோவிடை யேறித் திரிதந்தென்
சிந்தை கொண்டு
பாவிளங் கோல விசைபாடத் தந்த
பரிசதென்னே
கூவிளங் கோகில மின்னார் குடந்தைக்கும்
பேச்சுரனே

60 செவ்வானச் செழுஞ்சுடர் மாணிக்கத் தீங்கனி
என்றுன்னைச்
செவ்வாய் விண்டுரைப் பாருடன் படுத்தென்னை
மிகுபவ்வச்
செவ்வாரி படியாது காத்திடல் வேண்டும்
உன்பரங்காண்
கொவ்வைச் செவ்வாய்ச்சி யிடத்தார் குடந்தைக்கும்
பேச்சுரனே

61 அரும்பைப் பிணைத்த மலர்அகில சந்தனம்
ஆடரவம்
பெரும்பப் பணைத்ததாள லம்பிடச் செம்பொன்
பீலியலை

---

59. நாவிளம் கிள்ளை - குழறிப்பேசும் நாவையுடைய இளமை வாய்ந்த கிளியின். நண்ணியவர் - அடைந்த சிவபெருமான். சே இளம் கோ விடை - வயிரம் போன்ற இளமை கொண்ட சிறந்த காளைமீது. திரிதந்து - திரிந்து. பா இளங்கோல இசைபாட - தமிழ்ப்பாக்களில் முதிர்ச்சியுறாத விசித்திரமான இசையில் நான் பாடும்படியாக பரிது. தன்மை. கூஇளம் கோகிலம் - கூகூ என்று இசைபாடும் இளமைகொண்ட குயில்களைப் போன்ற மின்னார் குடந்தை - மின்னற்கொடி போன்ற மாதரர் வாழும் குடந்தை.
60. செல்வானத்துச் செழுஞ்சுடர், மாணிக்கமாகிற தீங்கனி என்று உன்னை. விண்டு உரைப்பாருடன் - விரித்துரைப்பாருடன். என்னைப்படுத்து - என்னையும் சேர்த்து. மிகு பவ்வம் - (கொடிய

தரும்பைத் தடங்கெடி லத்தார்இச் சொற்களில்
தான்வியந்தார்
குரும்பைப் பணைமுலை மின்னார் குடந்தைக்கும்
பேச்சுரனே

62 துன்றிக் கரிமருப் பேலம் சுரிநா(கு)
சோதிமணி
குன்றத் தகில்பிற வெல்லாம் அலைகொண்டு
கோலிவந்தாங்
கொன்றிக் கரைபொரு காவிரி வாயுற்
றிருந்ததென்னே
கொன்றைக் குழலுமை பங்கா குடந்தைக்கும்
பேச்சுரனே

63 நாட்டுறு பொய்யத் தனையும் நவின்றுநன்
மார்க்கமென்பால்
நீட்டுறு மெய்யனை நிந்தித் திடைதடு
மாறியவர்

---

நரகமாகிற.) கொடிய வினைகளைக் கொண்ட என்றுமாம். செவ்வாரி - நரகக்கடல். உன்பரம் - உன்கடமை. செவ்வாய்ச்சி-உமையம்மை. இடத்தாய் - இடப்பாகத்தில் கொண்டவனே.

61. பிணைத்த - சேர்த்த. மலரும் அகிலும் சந்தனமும் ஆடரவும் - பெரும்ப-மிகுதியாக. பணைத்த-கட்டிய.தாள் அலம்பிட பொன்னும் பீலியும் அலைதரும்; பீலி - மயில்தோகை. அலைதரும்-அலைகளில் மிதந்துவரும்; ஒன்றுடனொன்று கலந்து காணப்படுகின்ற. பைத் தடம் - பசுமை நிறைந்த அகன்ற. கெடிலத்தார் - நீரே[illegible]யுடையார்; காவிரியைக் குறிப்பது; கெடிலம் என்ற நதியைக் குறிப்பதும் ஒருபொருள். இச்சொற்களில்தான் - கும்பேச்சுரமாலையாகிற இச்சொற்களில். வியந்தார் - வியப்புற்றார். குடந்தைக்கும் பேச்சுரரைப்பற்றிய மாலையானதால், கெடிலம் என்பது குடந்தைக் கண் ஓடும் காவிரியைக் குறித்தது எனலே பொருந்தும்.

62. துன்றி - நெருங்கி. கரிமருப்பு - யானைத் தந்தம். சுரிநாகு - வலம்புரிச்சங்கு. குன்றத்து அகில் - மலையிடைத்தோன்றும் அகில்

மாட்டுறு சிந்தை யகலா வெளியனை
வாழ்விப்பையோ
கோட்டுறு காவிரி சூழ்தண் குடந்தைக்கும்
பேச்சுரனே

கும்பேச்சுரர் மாலை முற்றும்

சோலி - சேர்ந்து. ஒன்றி - ஒன்றுகலந்து. காவிரிவாய்-காவிரி பாயும் இடத்திலே. கொன்றைக்குழல் - கொன்றைப்பூவைக் கூந்தலில் அணிந்த.

63. நாட்டு உறு - நாட்டின் கண் பொருந்திய. நவின்று - கூறி. நீட்டுறும் - சுட்டிக காட்டிக்கூறுகின்ற மெய்யரை - உண்மையான தொண்டரை. அவர் மட்டும் உறு - அம்மெய்த்த தொண்டரின் பக்கம் பொருந்திய. அகலா - நீங்காத. எளியனை - ஏழையேனை. கோடு உறு - இருபுறமும் கரைகள் பொருந்திய,

## திரிபுரை மனோன்மணி மாலை

## திரிபுரை மாலை

## பழனி மாலை

## கும்பேச்சுர மாலை